*Muslim muracu*
*Malar 2, ital̲ 2*
*August 1949*

Record no. 215

# முஸ்லிம் முரசு



## பொருளடக்கம்

(மாத வெளியீடு)

அன்பும் இன்பமும் அறிவும் ஆற்றலும் பண்பும் புகழும்
இன்ப வாழ்வும் இனிது விளங்க முரசு முழங்கவே!

கௌரவ ஆசிரியர்: அல்ஹாஜ் வ. மி. ஷம்சுத்தீன்

மலர் 2 | சென்னை, ஆகஸ்டு 1949 | இதழ் 2

# வாழ்க சுதந்தரம்!

# ஓங்குக ஒற்றுமை!

ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளாக அடிமை வாழ்வு வாழ்ந்தோம்; அந்நியர் ஆட்சியில் அவதியுற்றோம். அன்று ஒரு நாள் 'சுதந்தரம் நமது பிறப்புரிமை, என்று முழக்கம் செய்தோம்; வீறு கொண்டெழுந்தோம்; காந்தி மகான் தலைமையில் கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று நடத்தினோம். ஒரு சொட்டு இரத்தமும் சிந்தாமல் 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ந் தேதியன்று நமது உயிரினும் இனிய சுதந்தரத்தைப் பெற்றோம்.

"1947 ஆகஸ்டு 15-ந் தேதி" என்பது உலக வரலாற்றிலேயே ஒரு ஒப்பற்ற தினம். உலக மக்களில் ஐந்தில் ஒரு பகுதியினருக்கு அன்றுதான் சுதந்தரச் சூரியன் உதயமாயிற்று! சுமார் 200 ஆண்டுகளாக 40 கோடி மக்களைப் பிணைத்திருந்த ஏகாதிபத்திய அடிமைத் தளைகள் அன்றுதான் அறுத்தெறியப்பட்டன. 'நாங்களும் சுதந்தர மக்களே' என்று பெருமையுடன் கூறிக்கொண்டு நாற்பது கோடி மக்களும் அன்றுதான் உலகிலே தலைநிமிர்ந்து நடக்கத் தொடங்கினர்! இது உலக வரலாற்றிலேயே ஒரு ஒப்பற்ற நிகழ்ச்சி. இந்த நிகழ்ச்சியை நினைப் பூட்டுகின்ற ஆகஸ்டு 15-ந் தேதியை ஆண்டுதோறும் நாம் கொண்டாடி வருகின்றோம்.

இன்று நாம் மூன்றாவது சுதந்தர தினம் கொண்டாடுகின்றோம்; மகிழ்ச்சி வெள்ளத்திலே மூழ்கித் திளைக்கின்றோம்; 'எதிர்காலம் இன்ப மயமாக விளங்கட்டும்!' என்று இன்னிசைப் பாடுகிறோம்; களிநடனம் ஆடுகிறோம்.

இன்று நாம் சுதந்தர தினம் கொண்டாட யார் யார் காரணமாக விளங்கினார்களோ, அவர்களையெல்லாம் நாம் இன்று நினைவு கூறுகிறோம். தாய் நாட்டின் உரிமைக்காகத் தங்களின் இன்னுயிர் நீத்த ஆயிரமாயிரம் வீரர்களுக்கும் வீராங்கனைகளுக்கும் நமது மரியாதையைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். 'அவர்களின் திருப் பெயர்கள் உலக வரலாற்றிலே உன்னதமாக விளங்கட்டும்!, என்று வாழ்த்துக் கூறுகிறோம்.



அடிமை வாழ்வை வெறுத்து, அந்நியரை எதிர்த்து, ஆவேசமாகப் போராடி மடிந்த தீரன் திப்பு சுல்தான் முதல் அஹிம்சைப் போர் துவக்கி, ஆயிரமாயிரம் வீரர்களையும் வீராங்கனைகளையும் அப்புதுமைப் போரிலே ஈடுபடுத்தி, அதில் வெற்றியும் பெற்றுச் சுதந்தரப் புருஷராக உயிர் நீத்த உத்தமர் காந்தி மகான் வரை நாம் இன்று நினைவு கூறுகின்றோம். அவர்களின் வீரமும் தீரமும் தேச பக்தியும் தியாக புத்தியும் நமக்கும் நமது சந்ததிகளுக்கும் சொந்தமாகட்டும் என்று சிந்தையுள் நினைக்கின்றோம்.

இந்த சமயத்தில் நமது உள்ளத்திலே எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைகின்றன. அவற்றுள் கண்ணின் மணியான காந்தி மகான் வாழ்ந்து மறைந்ததும் ஒன்று. அவர் ஒரு இலட்சிய புருஷராக வாழ்ந்தார்; 'தனக்கென வாழா பிறர்க்குரியாளர்' என்னும் பெருமைக்கு உரியவரானார்; 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று தனது இன்னுயிர் பிரியும்வரை இந் நாட்டுக்குத் தொண்டு புரிந்தார். அத்தொண்டிலே அவர் ஈடுபட்டிருந்த போதே அவரது ஆருயிர் பிரிந்தது.



பிறருக்காக வாழ்ந்து மறைந்த மாபெரும் மனிதர்களுள் மகாத்மாவும் ஒருவராகி விட்டார். அத்துணைப் பெரிய மனிதர் நமது நாட்டிலே தோன்றியதுபற்றி நாம் பெருமையடைகின்றோம்; அவரது பெயருக்குப் புகழ்பாடுகின்றோம்; ஆனால் நமது கடமையை மறந்து விடுகின்றோம்; அவர் காட்டிய வழியில் செல்லத் தவறிவிடுகின்றோம்.

மகான்களென்போர், கேவலம், நமது புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் பொருட்படுத்துவதில்லை; அதற்காக அவர்கள் மகிழ்ச்சியடைவதுமில்லை; மனம் உடைந்து போவதுமில்லை. அவர்களின் கடமையை அவர்கள் நிறைவேற்றி விட்டார்கள். அந்த அளவுக்கு அவர்களுக்குச் சாந்தியுண்டு; சமாதானமும் உண்டு

நமது கடமையை நாம் நிறைவேற்றுகிறோமா இல்லையா? இதுதான் நமது இடையறாத கேள்வியாகவும் ஆத்ம சோதனையாகவும் இருத்தல் வேண்டும்.

இந்த நாட்டின் நல்வாழ்வுக்காக காந்தி மகான் காட்டிச் சென்ற வழிகள் மிகவும் தெளிவாகவே இருக்கின்றன. அன்பு, அஹிம்சை, சத்தியம் ஆகிய மூன்றுமே காந்தியின் மூல மந்திரங்கள். "இந்த நாட்டிலே வாழ்கின்ற பல திற சமூக மக்களிடையே அன்பு நிலைபெற வேண்டும். குறிப்பாக இங்கேயுள்ள இந்துக்களும் முஸ்லிம்களும் சோதரர்கள் போல் சேர்ந்து வாழவேண்டும். இந்த நாட்டின் எதிர்கால வாழ்வு அவர்களின் ஒற்றுமையில்தான் இருக்கிறது" என்று அவர் உறுதியாக நம்பினார். அந்த ஒற்றுமைக்காக அவர் எத்துணைப் பெரிய தியாகம் செய்யவும் தயாராயிருந்தார். இந்த உண்மையை நாம் மறந்தால் மகாத்மாவையே மறந்துவிட்டவர்களாவோம். நமது கடமையில் தவறிய குற்றமும் நம்மைச் சேரும். எனவே, இந்த நாட்டிலே இந்து—முஸ்லிம் ஒற்றுமை ஓங்கவும், உலகெங்கும் அன்பும் அஹிம்சையும் சத்தியமும் நிலைபெறவும் எத்துணைப் பெரிய தியாகம் செய்யவும் நாம் தயாராயிருப்போமாக!

**வாழ்க நம் சுதந்தரம்! ஓங்குக ஒற்றுமை!**



## பொருத்தமில்லாத பேச்சு

சென்ற மாதம் கொண்டாடப் பெற்ற ஈத் பெருநாளன்று பாகிஸ்தான் பிரதமர் லியாகத் அலிகான் அவர்கள் தமது அறிவுக்கும் பெருமைக்கும் பொருந்தாத சில வார்த்தைகளைப் பேசியிருக்கின்றார்.

'பாகிஸ்தானில் உள்ள முஸ்லிம்கள் தங்களின் ஈத் பெருநாளை சுதந்தரமாகவும் மகிழ்ச்சியுடனும் கொண்டாடியதுபோல் இந்திய முஸ்லிம்கள் அந்தப் பெருநாளைக் கொண்டாட முடியவில்லை' என்று கராச்சியில் பேசியிருக்கின்றார். பாகிஸ்தான் பிரதமரின் பேச்சைக் கேட்டு இந்த நாட்டு முஸ்லிம்கள் ஆச்சரியப்படுகின்றனர். அவரது அறியாமைக்காக வருந்துகின்றனர். 'இது என்ன பேதைமை!' என்று பேசுகின்றனர். 'பொருத்தமில்லாத பேச்சு, கருத்தில்லாத கூற்று' என்று கண்டித்துப் பேசுகின்றனர். எனவே 'நெற்றிக்கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே' என்று கூறிவருகின்ற நாம் லியாகத் அலி அவர்களின் கூற்றைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை.

பாகிஸ்தானைப் பெறுவதற்காகப் பெரிய தியாகமெல்லாம் செய்த முஸ்லிம்கள் இன்று இந்தியாவில் இருக்கின்றனர் என்பது உண்மை. ஆனால் அதற்காக அவர்கள் வருந்தவில்லை. பாக்கிஸ்தான் பிரதமரின் உதவியையும் கோரவில்லை. பாக்கிஸ்தான் பெறுவதற்காகப் பெரிய தியாகமெல்லாம் செய்த இந்திய முஸ்லிம்களைப் பாக்கிஸ்தானிகள் தங்களின் மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தின்போது மறந்துவிடக் கூடாது என்று பாக்கிஸ்தான் முஸ்லிம்களுக்கு அறிவுறுத்த அவர் நினைத்திருப்பாராயின், "இந்தியா—பாக்கிஸ்தான் நல்லுறவை வளர்க்க நாம் பாடுபடுவோமாக!" என்று பேசி யிருக்கவேண்டும். அல்லது, "இந்திய முஸ்லிம்களுக்கு நாம் செய்யக்கூடிய உதவி ஒன்று உண்டாயின், அது பாகிஸ்தானில் உள்ள முஸ்லிம் அல்லாத சிறுபான்மை சமூக மக்களை அன்புடன் நடத்துவதே யாகும்" என்று அவர் பேசியிருந்தால் மிக மிகப் பொருத்தமாயிருந்திருக்கும். நாமும் மகிழ்ச்சிப் பெருங் கடலில் மூழ்கித் திளைத்திருப்போம்.

நாட்டுப் பிரிவினைக்குப் பின்னர் இந்தியாவில் வாழ்கின்ற முஸ்லிம்களைப்பாக்கிஸ்தான்பிரதமர் மறந்துவிடவில்லை என்பது நமக்குத் தெரியும். அதற்காக அவருக்கு நாம் நன்றி பாராட்டவும் கடமைப்பட்டிருக்கின்றோம். ஆனால், அவரது ஈத் பெருநாள் பேச்சு பொருத்தமில்லாதது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## டாக்டர் முஹம்மது ஹாட்டா

இந்தோனேஷியக் குடியரசுப் பிரதமர் டாக்டர் முஹம்மது ஹாட்டா அவர்கள் ஹேக் மாநாட்டுக்குச் செல்லும் வழியில் இந்தியாவில் இறங்கிப் பண்டித நேருவுடன் உரையாடிவிட்டு அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்திலும் பேசிவிட்டு கராச்சிக்குப் புறப்பட்டுவிட்டார்.

சுமார் 8 கோடி முஸ்லிம்களைக் கொண்ட இந்தோனேஷியாவின் பிரதமரே டாக்டர் முஹம்மது ஹாட்டா. இந்தியாவுக்கும் இந்தோனேஷியாவுக்கும் நீண்டகால நெருங்கிய கலாசாரத் தொடர்பு உண்டு. இது இன்னும் உறுதிப்படுமாறு இந்தியாவுக்கும் இந்தோனேஷியாவுக்குமிடையே நாளுக்கு நாள் நட்பு வளர்ந்து வருவது குறித்து நாம் மகிழ்ச்சி அடைகின்றோம். எதிர்காலத்தில் ஆசிய நாடுகளின் ஒற்றுமைக்கும் அகில உலக அமைதிக்கும் இந்தோனேஷியா பெரிய அளவில் துணை புரியுமென்பது திண்ணம்.

தனது மிருக பலத்தால் இந்தோனேஷியாவை அடக்கி ஆண்டு வந்த டச்சு ஏகாதிபத்தியம் இன்று பணிந்து வந்திருக்கிறது. அதன் அறிகுறியாகவே டாக்டர் முஹம்மது ஹாட்டாவை ஹேக் மாநாட்டுக்கு அது அழைத்திருக்கிறது.

இந்தியர்களாகிய நாம் இன்று சுதந்தர தினம் கொண்டாடுவது போல் அடுத்த ஆண்டில் இந்தோனேஷிய மக்களும் முழு உரிமையும் பெற்றுச் சுதந்தர தினம் கொண்டாடுவார்கள் என்று நம்புகிறோம். வாழ்க இந்தோனேஷியக் குடி அரசு! வீழ்க டச்சு ஏகாதிபத்தியம்!

## அட்டைப் படம்

இந்தியாவில் பாக்கிஸ்தான் ஹை கமிஷனராயிருக்கின்ற ஜனாப் முஹம்மது இஸ்மாயில் அவர்கள் புதுடில்லியில் நமது பிரதமர் பண்டித நேருவையும் அமெரிக்க நாட்டுத் தூதரையும் வரவேற்று விருந்து நடத்தியபோது எடுத்த படம். முதலில் இருப்பவர் பாக்கிஸ்தான் ஹை கமிஷனர். இரண்டாவது பண்டித நேரு மூன்றாவது அமெரிக்காவின் தூதர்.

# உலகப் போக்கு

## நேரு அங்கே!
## லியாக்கத் இங்கே!

நமது நாட்டுப் பிரதமர் பண்டித நேரு அவர்கள், அமெரிக்காவின் ஜனாதிபதி ட்ரூமனின் அன்பழைப்புக்கு இணங்க, அமெரிக்கா செல்லவிருக்கின்றார். அதே சமயத்தில் நமது பக்கத்து நாட்டுப் பிரதமர் லியாக்கத் அலீ அவர்கள் ஸ்டாலின் அனுப்பிய அன்பழைப்பை ஏற்று சோவியத் ரஷ்யா செல்லவிருப்பதாகத் தெரிகிறது.

இந்தியப் பிரதமரையும் பாக்கிஸ்தான் பிரதமரையும் அழைப்பதில் அமெரிக்காவும், ரஷ்யாவும் 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டிப் போடுவதன் இரகசியமென்ன?

செல்வம் கொழிக்கின்ற நாடு, சீமான்கள் நிறைந்த நாடு அமெரிக்கா. அது இந்தியாவை வருந்தியழைக்கக் காரணம் என்ன? இந்தியா ஏழை நாடாக இருந்தாலும் இங்கேதான் அமெரிக்காவின் வாழ்வும் தாழ்வும் இருக்கிறது. மூலப் பொருள்களை வெகு வேகமாக உற்பத்தி செய்து ஏராளமாகக் குவித்துக் கொண்டே போகின்ற அமெரிக்கா, அந்த மூலப்பொருள்களை எந்தக் கடலில் கொண்டு போய் போடுவது? அமெரிக்காவின் மூலப்பொருள்களை ஏற்கனவே ஏராளமாக் வாங்கிச் செலவு செய்து கொண்டிருந்த சீனாவும் இப்போது எதிரியின் கையில் போய் விட்டது. எனவே அமெரிக்காவின் மூலப் பொருள்களுக்கு அடுத்த பெரிய 'மார்க்கெட்'டாக இருப்பது நமது நாடுதான். எனவே, அமெரிக்கா நமது காலடியில் கிடந்து நாம் சொல்லுகிறபடி கேட்கத் தயாராயிருக்கின்றது. இந்த உண்மையை அறிந்தவர்களுக்கு அமெரிக்க ஜனாதிபதியின் அழைப்பு ஆச்சரியத்தைத் தரவில்லை. ஆனால் அமெரிக்காவின் அழைப்பை ஏற்றுக் கொண்ட நமது நேரு அவர்களின் பொறுப்பு மகத்தானது. ஏனெனில், அமெரிக்காவின் ஆதரவைப் பெற்ற சீனாவின் கதி அதோ கதியாகிவிட்டது. இந்தியாவும் அவ்விதம் ஆகிவிடக் கூடாதல்லவா?



இந்த நிலையில் பாக்கிஸ்தான் பிரதமர் லியாக்கத் அலீ கான் சோவியத் ரஷ்யாவின் அழைப்பை ஏற்றுக்கொண்டிருக்கின்றார். உலக ஆதிக்கப் போட்டியிலே முன்னணியில் இருக்கின்ற அமெரிக்காவும் ரஷ்யாவும் இந்திய உப கண்டத்தில் ஏன் இத்துணை அக்கறைக்கொண்டுள்ளன? அமெரிக்காவும் பிரிட்டனும் இந்தியாவைக் காதலிக்கின்றனவென்று அறிந்த ரஷ்யா இந்தியாவின் மற்றொரு அங்கமாகிய பாக்கிஸ்தானை நேசிப்பதில் புதுமை இல்லை.

இங்கே இன்னொரு உண்மையையும் கவனிக்க வேண்டும். சென்ற இரண்டு மாதங்களுக்கு முன்பு பாக்கிஸ்தான் பிரதமர் இலண்டனுக்குச் சென்றிருந்தபோது, அங்கே நடைபெற்ற காமன்வெல்த் பிரதமர்களின் மாநாட்டிலே நமது நாட்டுப் பிரதமர் பண்டித நேருவும் கலந்து கொண்டாரல்லவா? அப்போது பண்டித நேரு அவர்களைப் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் மிக அதிகமாகப் புகழ்ந்து கொண்டாடினார்கள். இந்தியா காமன்வெல்த்தில் இருப்பதற்கே நேரு ஒருவர்தான் துணை செய்யக் கூடும் என்பதைக் கண்டு கொண்ட பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் நமது நேருவை மிக அதிகமாகப் புகழ்தார்கள். வரவேற்பும் மரியாதையும் தடபுடலாகவே இருந்தன. அந்த அளவுக்கு அவர்கள் தன்னை மதியாததைக் கண்ட பாக்கிஸ்தான் பிரதமர் லியாகத் அலீகானுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. "நாங்கள் என்ன மண்ணாங்கட்டிகளென்று நினைத்துக்கொண்டீர்கள்? மரக்கட்டைகள், மானங் கெட்டவர்கள் என்று நினைத்துக் கொண்டீர்கள்?" என்று பிரிட்டிஷ்காரர்களைப் பார்த்துக் கோபக் கோபமாகக் கேட்டார். இப்படிக் கேட்டுவிட்டு இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்ட லியாக்கத் அலீகான் பாக்கிஸ்தானை அடைவதற்குள் சோவியத் ரஷ்யாவின் அன்பழைப்பு அவருக்குக் கிடைத்து விட்டது! பாரசீக நாட்டின் தலைநகரான தெஹ்ரானில் அவர் தங்கியிருந்தபோதுதான் ஸ்டாலின் அனுப்பிய அன்பழைப்பு அவருக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. எனவே ரஷ்யாவின் திடீர்க் காதலுக்கு இங்கே விளக்கம் தேவையில்லை. பிரிட்டனுடனும், அமெரிக்காவுடனும் பாக்கிஸ்தான் பிரதமர் பிணக்குற்றிருக்கின்ற சமயம் பார்த்து அவரைச் சரிப்படுத்தப் பார்க்கின்றார் ஸ்டாலின். பாக்கிஸ்தான் பிரதமரை ரஷ்யாவுக்கு அழைத்துச் செல்வதற்காக ஒரு விசேஷ ஆகாய விமானத்தையும் அவர் அனுப்பி வைக்கப் போகின்றாராம்!

லியாக்கத் அலீகான் சோவியத் ரஷ்யாவுக்கு விஜயம் செய்யப்போவதுபற்றி அரசியல் வட்டாரத்தில் அதிக முக்கியத்துவம் கற்பிக்கப்படுகிறது. இதைப்பற்றி யார் என்ன கூறினாலும், லியாக்கத்–ஸ்டாலின் சந்திப்பு உலக அமைதிக்கு உதவக் கூடுமென்பதில் ஐயமில்லை.

இன்று இருட்டிலே தடுமாறிக்கொண்டிருக்கின்ற இந்திய மக்களுக்குப் பண்டித நேரு ஒருவர்தான் கலங்கரை விளக்கமாகத் திகழ்கின்றார்.

# பண்டித நேருவும் காங்கிரஸும்

"சாரா"

**ப**ண்டித நேரு. ஆம்! அவர் ஒரு மக்களின் தலைவர்; ஆசியாவிலேயே மிக அதிகமான மக்களின் அன்புக்கும் அளப்பரிய மரியாதைக்கும் உரியவர். மகாத்மா காந்திக்குப் பிறகு இந்திய மக்களின் மகத்தான தலைவராக விளங்கும் பெருமை பெற்றவர் பண்டித நேரு ஒருவரே. பண்டித நேரு அவர்களின் பெருமைக்குக் காரணம் அவரது அறிவும் ஆற்றலுமல்ல; இராஜ தந்திரமுமல்ல. தியாகம் ஒன்றுதான் அவரது பெருமைக்குப் பெருங்காரணமாக விளங்குகிறது. அருமையான மனைவியும் ஆனந்த பவன் மாளிகையும் அவரது கருத்தைக் கவரவில்லை; கண்களை மயக்கவில்லை. அடிமை வாழ்வு ஒன்றுதான் அவரது கருத்தையும் கண்ணையும் உறுத்திக்கொண்டிருந்தன. அடிமை வாழ்வை வெறுத்து ஆனந்த பவன் மாளிகையைத் துறந்தார்; அருமை மனைவியைப் பிரிந்தார்; 13 ஆண்டுகள் சிறைவாசம் செய்தார்.

இது தியாக வாழ்வு அல்லவா? மனைவி, மக்கள், சுகவாழ்வு; இவைகளுக்கு அடிமையாகத் தகுந்த வயதில், 13 ஆண்கள் சிறைவாசம் செய்வதென்பது சாதாரண சோதனையல்லவே! இன்று அறுபதாம் ஆண்டு நடந்துகொண்டிருக்கிறது. அதில் பதின்மூன்று ஆண்டுகள் சிறையில் செலவாகியிருக்கிறது என்றால், அவர் பெற்றோருடன் வாழ்ந்து அவர்களை மகிழ்வித்தது எத்தனை ஆண்டுகள்? துள்ளி விளையாடித் துடுக்குத்தனம் செய்து தொல்லைகள் கொடுத்தது எத்தனை ஆண்டுகள்? பள்ளியிற் சென்று பல்கலைப் பயின்றது எத்தனை ஆண்டுகள்? மனைவியை மணந்து மாண்புடன் வாழ்ந்தது எத்தனை ஆண்டுகள்? மக்களைப் பெற்று மடிமிசை தாங்கி மகிழ்ந்து குலாவியது எத்தனை ஆண்டுகள்?

இதையெல்லாம் பார்த்தால் சிறையிலேயே நீண்ட காலம் செலவிட்டிருக்கின்றார் என்று தோன்றவில்லையா? சிறையில் இருந்தபோது அவர் எழுதிய உலக சரித்திரமும் வேறு பல தலையணை போன்ற புத்தகங்களும் அவரது நீண்ட கால சிறைவாசத்துக்குச் சான்றுகளாக விளங்கவில்லையா? இதையெல்லாம் இந்நாட்டு மக்கள் மறந்து விடமுடியுமா?

இந்த நாட்டிலே இன்று காங்கிரஸின் செல்வாக்கு கரைந்து கொண்டு வருகிறது. அதற்கு மக்களின் ஆதரவு மறைந்து கொண்டு போகிறது. ஆனால் அதே காங்கிரஸின் பிரதிநிதியாக நேரு இருக்கிறார். அவரது பெயருக்கு மக்களிடத்திலிருந்த மரியாதை குறையவில்லை! அவர் ஒரு தனி மனிதராகவே மதிக்கப்படுகின்றார். காங்கிரஸுக்கும் அவருக்கும் ஏதோ சம்பந்தம் இருப்பது போல் அவர் நினைத்துக் கொண்டிருந்தாலும், மக்கள் அப்படி நினைப்பதில்லை. அவர் ஒரு 'தனி மனிதர்' என்றுதான் அவர்கள் நினைக்கிறார்கள். அண்மையில் நிகழ்ந்த கல்கத்தா உபதேர்தலில் இந்த உண்மையைக் கண்டோம். காங்கிரஸின் பெயரால் பண்டித நேருவும் வல்லபாய் பட்டேலும் சேர்ந்து காங்கிரஸ் அபேட்சகரையே ஆதரிக்குமாறு அறிக்கைகள் விட்டுங்கூட, காங்கிரஸ் அபேட்சகரின் காலை வாரிவிட்டுவிட்டார்கள் வங்கப் பெருமக்கள்! ஆனால் மறுநாள் அங்கே விஜயம் செய்த பண்டித நேருவுக்கு மகத்தான வரவேற்பு அளித்தார்கள்! பலாத்காரத்தில் நம்பிக்கைக்கொண்ட விஷமிகள் சிலர் வெடி குண்டுகளை வீசி எறிந்தனர் என்பது உண்மையாயினும், காங்கிரஸுக்கு விரோதமாக முதல் நாளன்று ஓட்டுக் கொடுத்த ஆயிரக்கணக்கான மக்களே மறுநாள் பண்டிதரைப் பாங்காக வரவேற்றனர் என்பது பொய்யல்ல!

காங்கிரஸுக்கு மக்களிடையே இருந்த ஆதரவு குறைந்து வந்தாலும், பண்டித நேருவின் மீது பாமர மக்களின் அன்பு குறையவில்லை என்பதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது.

இப்பொழுது நடந்து கொண்டிருப்பது காங்கிரஸ் சர்க்கார். அதன் தலைவர் பண்டித நேரு என்பது உண்மையாயினும், அவரது கருத்தும் கொள்கையும் சர்க்காரின் நடைமுறைகளில் இடம்பெறவில்லை என்று பொதுமக்கள் நினைக்கின்றனர்.

இரண்டு முரண்பட்ட கொள்கைகள், ஒன்று மற்றொன்றுக்கு விட்டுக் கொடுத்து சர்க்கார் இயந்திரத்தை எப்படியோ இயக்கிக் கொண்டிருப்பதாகப் பொதுமக்கள் நினைக்கின்றனர். இதைத் தவிர வேறு வழியில்லை என்பதையும் அவர்கள் உணருகிறார்கள். நேருவின் இலட்சியங்களுக்கும் சர்க்காரின் கொள்கைக்கும் சம்பந்தமில்லை என்று பொதுமக்கள் நினைப்பது இயல்பாகிவிட்டது. எனவேதான், காங்கிரஸுக்கு ஏற்பட்ட அபகீர்த்தி நேருவைத் தீண்டவில்லை!

பண்டித நேரு தயவு தாட்சண்யம் உடையவர். அன்பும் பாசமும் அவரது சிறந்த பண்புகள். எனவே நண்பர்களுக்கும் உற்றார் உறவினருக்கும் நல்ல பதவிகளைக் கொடுத்து நட்புரிமைக்குப் பெருமையைத் தேடிக்கொள்ளுகிறார். இது ஓரளவு குற்றம் என்று நம் நாட்டிலே பலர் நினைக்கின்றனர். எனினும், சொந்த விஷயத்தில் 'சுயநலம்' இல்லாதவர் அவர் என்ற உண்மையை எதிரிகளே ஒப்புக்கொள்கின்றனர்! எனவே, பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் நாட்டு மக்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால் சூழ்நிலையும் சுற்றுச் சார்புகளும் அவரது வெற்றிக்குத் துணைசெய்யவில்லை. காங்கிரஸின் அமைப்பில் அவருக்கே கசப்பு ஏற்படும்படியான மாறுதல் இன்று நாட்டிலே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இரண்டு வருட காங்கிரஸ் ஆட்சியில் இந்த நாட்டின் ஏழைப் பெருங்குடி மக்களுக்கு எதிர்காலத்தைப்பற்றி எந்தவிதமான நம்பிக்கையும் உண்டாகவில்லை. அவர்களின் ஏழ்மையை, இல்லாமையை, வறுமைத் துன்பத்தை ஒழிக்க இந்த சர்க்கார் எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை.

இதற்கு சர்க்கார் என்னதான் சமாதானம் கூறினாலும் சாதாரண பொதுமக்களின் செவிகளில் ஏறுவதில்லை. அவர்கள் பொறுமை இழந்தவர்களாகி விட்டார்கள். வாழ்க்கை வசதியிலே நடுத்தர நிலையில் இருக்கின்றன மக்களே இன்று பொறுமையிழந்து காணப்படும்போது, ஏழைகள்

எப்படி தங்களின் வறுமையைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியும்? அவர்கள் எப்படி அமைதியான வாழ்வு நடத்தமுடியும்?

இதைப்பற்றிப் பண்டித நேரு போன்ற சிறந்த சிந்தனையாளர்கள் அடிக்கடி சிந்திக்கவே செய்கின்றனர். ஆனால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அதிர்ஷ்டவசமாக அலாவுத்தீனின் அற்புத விளக்கு நமது நேருவிடம் இருந்திருந்தால் அவர் எல்லாரிடமும் நிச்சயமாக நல்ல பெயர் வாங்கியிருப்பார்!

இன்றைய நிலையில் அலாவுத்தீனின் அற்புத விளக்குத்தான் என்ன செய்யமுடியும்? பொருளாதார நெருக்கடியில் உலகமே திணறிக்கொண்டிருக்கின்ற இதுகாலை இந்தியாவுக்கு யாருடைய அற்புத விளக்குகள் வந்துதான் என்ன செய்யமுடியும்? நிலைமை மிஞ்சிவிட்டது! இருட்டிலே தடுமாறிக்கொண்டிருக்கின்ற இந்திய மக்களுக்கு நேரு ஒருவர்தான் கலங்கரை விளக்கமாகக் காட்சியளிக்கின்றார்.

சமீபகாலமாக 'இலஞ்சமும் கொஞ்ச புத்தியும் நிறைந்த சுயநல மக்களுக்கே சொந்தமாகிவிட்ட காங்கிரஸைக் கலைத்துவிடலாமாவென்ற சிந்தனையில் பண்டித நேரு ஆழ்ந்திருக்கின்றார். காங்கிரஸை இனி புனிதப்படுத்துவதென்பது கருப்பு நாயை வெள்ளை நாயாக்கும் தெனாலிராமனின் கதையைத்தான் ஒத்திருக்கும்! எனவே, காங்கிரஸையே ஒழித்துவிட்டு, அடுத்த பொதுத் தேர்தலுக்குள் புதியதோர் அரசியல் கட்சியைத் தோற்றுவிப்பதுதான் புத்திசாலித்தனம். அதில் இன்று காங்கிரஸில் இருப்பவர்களைப்போன்ற வகுப்பு வெறியர்களும் விஷமிகளும் வந்து புகுந்துகொள்ளாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். சுருக்கமாகச் சொல்லுவதாயின், பண்டித நேரு தோற்றுவிக்கின்ற புதிய கட்சி அவரது பரந்த நோக்கங்களுக்கும் சிறந்த பண்பாடுகளுக்கும் ஒரு பிரதிபிம்பமாக விளங்கவேண்டும்.

இதுதான் பண்டித நேரு அவர்களின் எதிர்கால வேலைத் திட்டம் இனிது நிறைவேறவும், அவரது இன்பக்கனவு நினைவாகவும் உகந்த ஒரே வழி என்பது உறுதி. உறுதி, உறுதி.

---

## அடுத்த இதழில்

இந்தோனேஷியக் குடிஅரசின் தலைவர் டாக்டர் அஹமத் சுகர்ணோவின் வரலாறும் 'உலகத்துக்கு ஒரு புதுமை' (ஜின்னா வரலாறு)யும் மற்றும் பல சிறந்த கட்டுரைகளும் வருகின்றன. செப்டம்பர் இதழ் முதல் தேதியே வெளி வந்துவிடும்.



# அரபு நாடு தந்த அண்ணல்

அ. ஷர்புத்தீன்

அரபு நாடு உலகுக்கு ஈந்த ஒப்பற்ற தீர்க்கதரிசி முகம்மது நபியவர்களைப் பற்றி ஆராய்வதற்கு முன்பு அன்னார் பிறப்பதற்கு முன்னர், அரேபியர்கள் குறிப்பாக மக்கா வாசிகளின், நிலைமையை ஆராய்வதே முதற் கடன்.

பண்புகள்: பொதுவாக அரபியர்களிடையே விருந்தினர்களை உபசரித்தல், மனிதர்களிடம் கருணை காட்டல், வாக்குறுதிகளை நிறைவேற்றல் முதலிய சில நற்குணங்கள் காணப்பட்டன; என்றாலும் அவர்களிடையே பல தீய ஒழுக்கங்கள் குடிகொண்டிருந்தன. கள்ளருந்தல், களவாடல் சூதாடல், இவைகள் அவர்களின் தினசரிப் பழக்கங்களாக இருந்து வந்தன.

அக்காலத்தில் கவிஞர்கள் இருந்தனர்; அவர்கள் சிற்றின்பக் கவிதைகளைப் பாடுவதும், மக்களிடையே பகைமை வித்தை விதைப்பதுமே தமது கடமைகளெனக் கருதி வந்தனர்.

பெண்கள்: அந் நாட்டவர் பெண்களை மிகவும் இழிவாக நடத்தி வந்தனர். ஒரு ஆண் மகன் கணக்கற்ற பெண்மணிகளை மணப்பான். விரும்பினால் காரணமின்றி விட்டு விடுவான். பெண்களுக்கு மணவினை, சொத்து முதலியவைகளில் எத்தகைய உரிமைகளும் கிடையா. சில ஏழைக் குடும்பத்தவர்களும் தாழ்ந்தோர்களும் வறுமையின் காரணத்தால் பெண் குழந்தைகளை உயிருடன் புதைத்து விடுவர். இத் தீவினையைப், பெற்ற தாயே செய்தாக வேண்டும்! அந்தோ! கொடுமை!!

மதங்கள்: அக்கால அரபியர்கள் பலரும் பல மதங்களைத் தழுவியிருந்தனர் என்ற போதிலும் அங்கு விக்கிரக வணக்க மதமே மிக்கிருந்தன. அம்மதம் மக்களின் உள்ளங்களிலே வேரூன்றி விட்டது.

மூடக்கொள்கை: சில வணக்கம் செய்பவர்களிடையே அநேக மூடக்கொள்கைகள் நிறைந்திருந்தன. எடுத்துக்காட்டாக மழை பெய்யா விட்டால் பசுவின் வாலில் வைக்கோலைக் கட்டித் தீயிட்டு விடுவர். வேதனையைப் பொறுக்க வியலாத பசு துள்ளியோடும்போது அவர்கள் பின் தொடர்ந்து, மழை! மழை! என்று ஆர்ப்பரிப்பர், அன்றியும் இறந்தவர்களைப் புதைத்த இடத்தின் பக்கத்தில் ஒரு ஒட்டகத்தைக் கட்டி அதற்குத் தண்ணீரும் உணவும் கொடாது அதை வற்றிச் சாகும்படி செய்வர். ஏனென்றால் அவ் வொட்டகம்

இறந்து பட்டவர் மறுமையில் சொர்க்கத்துக்கு ஏறிச் செல்லுவதற்கு வாகனமாக பயன்படுமாம்! இன்னபிற மூடக்கொள்கைகளும் அந்நாட்டவர்களிடம் மலிந்திருந்தன.

கொலை: அவர்கள் மனித உயிரைச், சிறு பிராணியின் உயிரெனக் கருதினர். ஒட்டகம் மேய்ப்பதனாலும் குதிரைச் சவாரியில் முன் பின்னாக செலுத்துவதாலும் உண்டாகும் போர், பல குடும்பங்களை நாசமாக்கும். பழிக்குப் பழி வாங்குவதை அவர்கள் பெருமை எனக் கருதி வந்தனர். கொல்லப்பட்டவனின் ஆத்மா பழி வாங்கும் வரை அது ஆந்தை உருவெடுத்து அலையும் என்பது அவர்களின் கொள்கை.

இத்தகைய கொடுமைகளில் உழன்று கொண்டிருக்கும் மக்களை நன்னெறிப் படுத்த நல்லதோர் தீர்க்கதரிசி தேவையன்றோ? இதனாற்றான் அரேபியாவிலே அந்த அரபிகளின் மரபிலே நபிமணியவர்களைத் தோற்றுவித்தான் இறைவன். நபிமணியவர்களின் பிறப்பை நவிலப் போந்த நாவலர்:—

*"நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து*
*நெடுநில மெங்கணும் பரந்து*
*துறவறந் தவறி இல்லற மடிந்து*
*சுடரிலா மனையது போலக்*
*குறைபடுங் காலம் இருளெனுங் குபி [ரின்*
*குலமறுத் தறநெறி விளக்க*
*மறுவிலா தெழுந்த முழுமதி போல*
*முகம்மது நபிபிறந் தனரே"*

(நெறிநிலை-சன்மார்க்கநிலை, திரியா-காறுபட, மருண்மத-மனதை மருளச் செய்யும் மார்க்கம். நெடுநிலம்-பெரிய பூமி, பரந்து-பரவி. மடிந்து-அழிந்து. குபிர்-அஞ்ஞானவிருள், அறநெறி-நல்வழி. மறுவிலாது-குற்றமில்லாது.)

உலகில் சன்மார்க்கநிலை மாறுபட்டு பகுத்தறிவுக்கு ஒவ்வாத நச்சு நோய்களாகிய மதங்கள் மிகுந்து, இல்லறம் துறவறம் என்ற நல்லறங்கள் மடிந்து, விளக்கில்லாத வீட்டைப்போல அஞ்ஞான இருள் கௌவிய உலகில் உள்ள மக்களுக்கு அறநெறியை விளக்க குற்றமற்று எழுந்த குழுமதிபோல முகம்மது நபியவர்கள் பிறந்தார்கள் என்றார்.

இச் செய்யுளில் உமறுப் புலவர் முசம்மது நபியை "மறுவிலா தெழுந்த முழுமதி" என்று ஏன் கூறினார்? பூரண சந்திரனிடத்து களங்கம் உண்டு. ஆனால் முகம்மது நபியிடத்து எவ்வகைக் களங்கமோ, குறையோ இல்லை. ஆதலால் அவரை "மறுவிலாத முழுமதி" என்று கூறியிருக்கலாம். அன்றியும் சந்திர ஒளி தண்ணிய தன்மை வாய்ந்தது, முகம்மது நபி தண்ணிய கருணை வாய்ந்தவர். ஆதலால் அவரை "முழுமதி" என்று கூறிருக்கலாம். (முகம்மது நபி இறைவனின் ஒளியிலிருந்து ஆக்கப்பட்டவர் என்றும், அவர் இறைவனின் உத்திரவில்லாமல் எதையும் சொல்லவுமாட்டார், செய்யவும் மாட்டார் என்றும், அவர் ஒவ்வொரு நேரமும் இறைவனின் உத்திரவை எதிர்பார்த்த வண்ணமாகவே இருப்பார் என்றும் இஸ்லாமிய ஏடுகள் பகருகின்றன) சந்திரனுக்குத் தனக்கென ஒளி கிடையாது. அது சூரியனின் ஒளியைத்தான் பெற்றுப்பிரகாசிக்கின்றது. அதைப்போல, இறைவனாகிய சூரிய ஒளியிலிருந்து முகம்மதாகிய சந்திரன் பிரகாசிக்கிறது என்ற காரணத்தைக் கொண்டு, புலவர் முகம்மது நபியை "முழுமதி" என்று கூறினார் போலும்.

*"பானுவின் கதிரா லிடருறுங் காலம்*
*படர்தரு தருநிழ லெனலாய்*
*ஈனமுங் கொலையும் விளைத்திடும் பவ [நோய்*
*இடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்*
*தீனெனும் பயிர்க்கோர் செழுமழை [யெனலாய்*
*குறைஷியின் திலகமே யெனலாய்*
*மானிலந் தனக்கோர் மணிவிளக் கென [லாய்*
*மகம்மது நபிபிறந் தனரே"*

(பானு-சூரியன். இடர்-துன்பம். தரு-மரம், ஈனம்-இழிசெயல். திலகம்-திலகம்.)

கொடிய வெயிலால் தாக்கப்பட்டுத் துன்பமடையும் உயிர்கள் இளைப்பாற குளிர்ந்த ஆலமர நிழல் கிடைத்தாற்போல, குபிரென்ற வெயிலின் வெப்பத்தால் தாக்கப்பட்டுத் துன்பமடையும் மக்கள் இன்பமடைய எழிலொழுகும் குளிர்ந்த கருணை என்னும் நேர்வழி நிழலாகவும், பலவகை நோய்களின் இடரைத் தவிர்ப்பதற்கு மருந்து அமைந்தாற்போல, ஈனச் செயல், கொலை,

என்று சொல்லப்படுகின்ற பாவமாகிய நோயைப் போக்குவதற்கு ஒப்பற்ற மருந்தாகவும், சூரிய வெப்பத்தால் வாடிவதங்கும் பயிரைச் செழிப்படையச் செய்யும் மழையைப்போல "தீன்" என்று சொல்லப்படுகின்ற பயிருக்குச் செழிப்பைத் தரும் மழையாகவும், குறைஷி குலத்தின் திலகமணி போலும் அந்தகார விருளால் சூழ்ந்துள்ள நிலவுலகை விளக்கமடையச் செய்ய ஓர் ஒப்பற்ற மணிவிளக்கைப் போலவும் முகம்மது நபியவர்கள் பிறந்தார்கள் என்று உவமை தோன்ற உரைக்கின்றார், உமறு.

பூவினிற் சிறந்த மக்கா புரத்திற்
புகழொடு பிறந்த நாயகரைக்
காவினிற் சிறந்த பதிமதினாவிற்
கதியரசியற்றிய வேந்தை
பாவினிற் சிறந்த பாவகம் புனைந்த
பையலுக் கருள் தருமுகிலை
நாவினிற் சிறந்த நபிமுகம்மதுவை
நலனுற வென்று காண்குவனே.

உமறுப்புலவர்

---



டில்லி ஜாமா மஸ்ஜிதில் சென்ற வருடம் முஸ்லிம்கள் சுதந்திர தினம் கொண்டாடிய பொழுது கவர்னர் ஜெனரல் கனம் ராஜாஜி அவர்களை அங்கே வரவேற்று உபசரித்தனர்.



மொழி பெயர்ப்பு : எஸ். ஏ. கமால்

'வாளாயுதத்தைவிட வன்மையுடையது பேனா' வென்ற உண்மைக்கு இலக்கான எழுத்தாளர்களுக்குள்ளே 'டான்' ஆசிரியர் அல்தாப் ஹுஸைன் முதன்மையாக விளங்குகிறார். காயிதே ஆஸம் ஜின்னாவுடன் நெருங்கிப் பழகும் நல்ல வாய்ப்புப் பெற்றவர்களுள் அல்தாப் ஹுஸைனும் ஒருவர். இவர் காயிதே ஆஸமின் குணாதிசயங்களைப் பற்றி டானில் எழுதிய ஆங்கிலக் கட்டுரையின் மொழிபெயர்ப்பே இது.

# காயிதே ஆஸம்

'டான்' ஆசிரியர் அல்தாப் ஹுஸைன்

சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு ஒருநாள் நான் அவரை நேரில் சந்திக்கும் பேறு பெற்றேன். முஸ்லிம் லீகைத் திருத்தி அமைக்கும் பொருட்டு அவர் அகில இந்திய சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். கல்கத்தாவில் அவர் வந்து இறங்கிய மறுநாள் எனக்கு ஒரு அழைப்பு வந்தது. அதில் அவர் என்னைக் காண விரும்புவதாகக் கண்டிருந்தது. 'எதற்காக என்னை அவர் அழைக்க வேண்டும்?' என்ற பெரிய கவலையுடனும் குழப்பத்துடனும் அவர் தங்கியிருந்த இஸ்பஹானியின் இல்லத்தை நோக்கிச் சென்றேன். அவர் அன்புடன் எனது கையைப்பிடித்துக் குலுக்கினார். அது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. ஏனெனில், நான் அவருக்கு முன்பின் அறிமுகமில்லாதவன். அரசியல் துறையிலும் முக்கியஸ்தனல்ல.

அவர் என்னைப் பார்த்தவுடன் கூறியது இதுதான்:

"நான் உங்கள் கட்டுரைகளைப் படித்தேன். நீங்கள் சரியான பாதையில் செல்லுகிறீர்கள் என்று சொல்ல விரும்பினேன்."

என்னைப்பற்றிய இரகசியம், அதாவது நான் 'ஐனுல் முல்க்' என்னும் புனைபெயருடன் ஸ்டேட்ஸ்மனில் இடைவிடாமல் எழுதிக்கொண்டிருந்தது அவருக்கு எப்படித்தெரியவந்தது என்பது இன்றளவும் எனக்குத்தெரியாது! (ஐனுல் முல்க் என்னும் எனது புனைபெயர் பிறகு 'ஹபீத்' என்று மாற்றிக்கொள்ளப்பட்டுவிட்டது.) அப்புறம் அவர் பேசத்தொடங்கிவிட்டார். நான் அவர் பேசுவதைக்கேட்டுக் கொண்டேயிருந்தேன். அநேகமாக அதே பழக்கந்தான் கடைசி வரையில் எங்களிருவருக்கிடையே இருந்துவந்தது. நாங்கள் சந்திக்கும்போதெல்லாம்

அநேகமாக அவர் பேசிக்கொண்டேயிருப்பார்; நான் கேட்டுக்கொண்டேயிருப்பேன். அவருடன் எனக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பில் எனக்கு எவ்வளவு அறிவு விளக்கம் உண்டாயிற்றோ, அதே அளவுக்கு அது ஆனந்தமாகவும் இருந்தது. எதிர்காலத்தில் என்ன நடைபெறப் போகிறது என்பதை அப்போதுதான் முதல்தடவையாக நான் அறிந்தேன். ஜனாப் ஜின்னாவின் தூரதிருஷ்டியிலும் திட்டத்திலும் எனக்கு அப்போதே நம்பிக்கைப் பிறந்துவிட்டது.

அவரிடம் ஒரு சிறந்த குணம் இருப்பதை நான் அப்போது கண்டேன். இந்திய முஸ்லிம்களையெல்லாம் ஸ்தாபன ரீதியில் ஒன்றுபடச்செய்து, அவர்களை ஒரு மகத்தான சக்தியாக விளங்கச்செய்யத் தொடங்கிய நாள் முதல், ஒவ்வொரு துறையிலும் வழியிலும் திறமையுள்ள மனிதர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களின் சேவையைத் தேசிய இலட்சியத்தின் வெற்றிக்காகப் பயன்படுத்திக்கொள்ளுவதில் அவர் கண்ணுங் கருத்துமாயிருந்தார். அறிவும் திறமையும் உள்ளவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடிப்பதில் அவருக்கு அபூர்வத்திறமை இருந்து வந்தது. அறிவும் திறமையும் உள்ளவர்களை அவர் உற்சாகப்படுத்தினார். அத்தகையவர்களில் தலைசிறந்தவர்களையும் தேர்ந்தெடுத்தார்.

இட்பொழுது நான் பத்து வருஷ காலத்தைப்பற்றி ஒன்றுமே கூறாமல், 1945 க்கு வந்துவிட்டேன்! 1945-ம் ஆண்டில் டான் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து, நேரடியாகத் தொண்டு செய்யுமாறு, நான் காயிதே ஆஸம் அவர்களால் அழைக்கப்பெற்றேன். இப்பொழுது அவருடன் நெருங்கிப் பழகும் நல்ல சந்தர்ப்பம்கிடைத்தது. நாட்டின் நலத்துக்காக நாட்டு மக்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று அவர் விரும்புகிறார் என்பதை இன்னும் நன்றாக அறியும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது.

எல்லாவற்றையும்விட முக்கியமாக நான் அவரிடம் அறிந்துகொண்டது என்னவென்றால், அவர் எடுத்துக்கொண்ட காரியத்தில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது என்பதுதான். தாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சியில் கஷ்டங்கள் குறுக்கிடக்கண்டால், இரண்டாந்தரமனிதர்கள் இடைநடுவே அந்த முயற்சியைவிட்டு நழுவி ஓடிவிடப்பார்ப்பது இயல்பு. இத்தகையவர்கள் காயிதே ஆஸம் பேசுவதைச் சில நிமிஷ நேரம் கவனித்தால் போதும்! அவர்கள் எத்தனையோ புதுமைகளையெல்லாம் செய்துவிட முடியும்! காயிதே ஆஸமின் நீண்டகால சுதந்தரப் போராட்டத்தில் எத்தனையோ சந்தர்ப்பங்களில் எதிரிகளின் ஒன்றுபட்ட முன்னணியையும் மகத்தான எதிர்ப்பையும் சமாளிக்க வேண்டியிருந்தது. ஆனால் ஒருதடவை



கூட அவரது மனோதைரியம் குறையவில்லை! அன்றொரு நாள் நமது பிரதமர் சொன்னார், "சரணாகதி என்பது நமது அகராதியிலேயே இல்லாத ஒரு வார்த்தை" என்று. அவரே காயிதே ஆஸமின் உண்மையான வாரிசு என்பதற்கு இதுதான் அடையாளம்!

## பண்பட்ட மனம்

'பயிற்சியளிக்கப்பெற்ற மனம்' (Trained Mind) என்பது பற்றிக் காயிதே ஆஸம் அடிக்கடி பேசுவதுண்டு. அவ்வாறு பயிற்சி அளிக்கப்பெற்றுப் பண்பட்ட மனமே ஒரு பிரச்னையின் பல திற உண்மைகளை உணர முடியும், தோல்விகளிலிருந்து தற்காத்துக்கொள்ளமுடியும் என்று அவர் கூறுவதுண்டு. உற்சாகத்தை இழந்து, கொள்கைகளையும் விட்டுக்கொடுத்துத் தோல்வியை வரவேற்கின்ற மனிதர்களிடம் அவருக்குக் கோபம் வந்துவிடும். அவர் தன்னைத் தானே 'பொறுமைசாலி' என்று பெருமையுடன் கூறிக்கொள்வார். மற்றவர்களும் அப்படியே இருக்கவேண்டுமென்று அவர் விரும்பினார். "உங்கள் மனதுக்கு ஒழுங்காகப் பயிற்சி அளிக்க வேண்டும்" என்று அவர் என்னிடம் பலதடவைகள் கூறியுள்ளார். அதேமாதிரி இன்னும் பலருக்கும் அறிவுறுத்தியிருக்கின்றார் என்பது எனக்குத் தெரியும்.



Courtacy : "Deccan Times"

"நமது மக்களிடமுள்ள குறைபாடு என்னவென்றால் உண்மையில் ஒன்றையும் புரிந்துகொள்ளுவதற்கு முன்பே திடீரென ஒரு முடிவுக்கு வந்துவிடுகின்றனர்" என்று காயிதே ஆஸம் அடிக்கடி கூறுவதுண்டு. நமது

முக்கியமான முன்னணித் தலைவர்களில் எத்தனையோ பேர் எதைப்பற்றியாவது ஆலோசிக்கும் பொருட்டுக் காயிதே ஆஸமிடம் செல்லும்போது, அந்த விஷயத்தைப்பற்றித் அவர்கள் எல்லாம் அறிந்தவர்கள் போல் நினைத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் காயிதே ஆஸம் அதைப் பற்றிப் பேசிய பிறகுதான், அந்தப் பிரச்னையைப்பற்றி அவர்கள் முதலில் தெரிந்துகொண்டிருந்தது மிகமிகக் குறைவு என்ற உண்மையை உணருவார்கள்!

ஒரு மனிதன் ஏக காலத்தில் பலவித வேலைகளைச் செய்வதாகப் பொறுப்பேற்றுக்கொள்வதை காயிதே ஆஸம் விரும்பவில்லை. 'உங்களுக்கு உரிய வேலையை மட்டுமே செய்யுங்கள்; அதை முற்றிலும் ஒழுங்காகச் செய்யுங்கள்' என்பதே அவரது இடைவிடாத அறிவுறுத்தலாக இருந்துவந்தது. எனக்கு இருந்த உற்சாகத்தில், "நான் அதைச் செய்கிறேன்; இதைச் செய்கிறேன்" என்று அவரிடம் கூறுவேன். ஆனால் அதற்காக என்னை அவர் மெதுவாகக் கோபித்துக் கொள்ளுவார்.

எவ்வளவு சிறிய விஷயத்தையும் அவரே நேரில் கவனிப்பதற்கு அருகதையற்றதென்று அவர் நினைத்ததில்லை. தமக்கு வருகின்ற ஒவ்வொரு கடிதத்தையும் ஒன்றுவிடாமல் கவனமாகப் படித்துப்பார்க்கின்ற இவர் போன்ற பலவிதமான பொறுப்பும் அந்தஸ்தும் உடைய வேறொரு மனிதரை நான் கண்டதில்லை! ஒவ்வொரு நாளும் வருகின்ற ஏராளமான கடிதங்களைப் பிரித்துப் படிக்கவே பல மணி நேரம் செலவிடப்பட்டுவந்தது. அத்தனைக் கடிதங்களுக்கும் பதில் எழுதினாலும் எழுதாவிட்டாலும் அவைகளையெல்லாம் அவர் படித்துப்பார்ப்பதுண்டு. தன்னைப் பின்பற்றிய ம்க்களின் மனோபாவத்தையும் உள்ளுணர்ச்சியையும் அவர்கள் அனுபவித்த கஷ்ட நஷ்டங்களையும் இடைவிடாமல் அறிந்துகொள்ள, அவருக்கு இது ஒரு சாதனமாகவும் இருந்தது. காயிதே ஆஸம் கவர்னர்-ஜெனரலான பிறகு அவருக்கு வந்த கடிதங்களை சிப்பந்திகளே கவனித்து, அவைகளில் முக்கியமான கடிதங்களை மட்டும் அவரது பார்வைக்கு அனுப்பி வைத்தனர். இது அவசியமாகவும் ஏற்பட்டுவிட்டது. எனினும் இதற்குப் பிறகு அவர் இன்னும் அதிகமான காகிதக்கட்டுகளையும் அரசாங்க தஸ்தாவேஜ்களையும் படிக்கவேண்டியிருந்தது!

## கடுமையான மனிதர்

காயிதே ஆஸம், கடமையில் கண்டிப்பான மனிதர். உண்மையில் அவரே தமது கடமையில் கண்டிப்பாயிருந்தார். அவருடன் வேலை செய்த மற்றவர்களையும் அவர் சரியான வேலை வாங்காமல் விடமாட்டார். "ஒவ்வொருவரும் அவரவர் இடத்திலேயே இருந்து கடமையை நிறைவேற்றவேண்டும். விடுமுறை பெற இப்போது நேரமில்லை" என்று அடிக்கடி அவர் கூறுவதுண்டு. நான் எப்போதோ ஒரு தடவை அவரது கோபத்துக்கு ஆளாகியிருக்கிறேன். அது, இந்த உத்தரவை ஒரு தடவை மீறி, நானாகவே ஒருநாள் விடுமுறை எடுத்துக்கொண்டதால்தான்!

காயிதே ஆஸம் அவர்கள் மிகவும் ஒழுங்கும் கட்டுப்பாடும் அதிக உஷாரும் உடையவர். இவர் உட்கார்ந்திருக்கும்போது, இவரைச் சுற்றிலும் எஃகினால் செய்யப்பட்ட இரும்புப் பெட்டிகள் பல இருக்கும். அவைகளில் முக்கியமான கடிதங்களும் செய்திப் பத்திரிகைகளின் பிரதிகளும் இருக்கும். முக்கியமான கட்டுரைகள் அடங்கிய வாரப் பத்திரிகைகளும் மாதாந்த சஞ்சிகைகளுங்கூட அவைகளில் இருக்கும். பிறருடன் பேசிக்கொண்டே இருக்கும்போது அவர் மெதுவாகத் தமது பெட்டிச் சாவிகளை எடுப்பார். மிகவும் உஷாராக ஒரு பெட்டியைத் திறந்து, அதிலிருந்து சில தஸ்தாவேஜ்களை எடுத்து, தனது கருத்துக்கு ஆதாரமாக அவைகளிலுள்ள குறிப்புக்களைப் படித்துக் காட்டிவிட்டு முன்பு இருந்த இடத்திலேயே அந்த தஸ்தாவேஜ்களை வைத்துப் பூட்டிவிட்டுத்தான் மேற்கொண்டு பேசத் தொடங்குவார். அவர் எப்பொழுதும் அவசரப்படுவதே இல்லை.

எவ்வளவு வேலை செய்தாலும் சரி; எத்தனை மனிதர்களைக் கண்டு பேசினாலும் சரி; ஏராளமான செய்திப் பத்திரிகைகளை ஒவ்வொரு நாளும் அவரால் படித்துப்பார்க்க முடிந்தது. இதன் காரணமாக அவர் ஒரு மிகப்பெரிய மனிதராக மட்டும் விளங்கவில்லை; நமது தலைவர்களுக்குள்ளேயே மிக அதிகமான உலக ஞானம் உடையவராகவும் இருந்தார்.

## பத்திரிகைச் சுதந்தரம்

'பத்திரிகைச் சுதந்தரம்' என்றால் என்னவென்று காயிதே ஆஸமே சரியாக அறிந்திருந்தார். பத்திரிகை ஆசிரியர்களின், எழுத்தாளர்களின் உரிமையும் பெருமையும் பற்றி அவர் உன்னதமான கருத்துக்களையே கொண்டிருந்தார். டான் பத்திரிகையைத் தோற்றுவித்தவர் என்ற முறையிலும், அதன் ட்ரஸ்டி என்ற காரணத்தாலும் அந்தப் பத்திரிகையின் கொள்கையை நிர்ணயிப்பதில் அவரே ஏக சர்வாதிகாரியாக விளங்கியிருக்கமுடியும். ஆனால் அப்பத்திரிகையின் ஆசிரியராக நான் வேலை பார்த்த மூன்று வருட காலத்தில், ஓரே ஒரு முறைதான் நான் எப்படி எழுதவேண்டும் என்று எனக்கு ஆலோசனை கூறியுள்ளார்! அதுகூட அரசியலைப்பற்றியதல்ல. ஒருநாள் புதுடில்லியில் அவர் என்னைக் கூப்பிட்டனுப்பி, பின்வருமாறு கூறினார்:

"நான் ஒருபோதும் எதைப் பற்றியும் எழுதுமாறு உங்களைக் கேட்டதில்லை. ஆனால் இப்போது

கேட்கப்போகிறேன். ஜனங்கள் எனக்கு நேரில் கடிதம் எழுதுவதை நிறுத்தும்படி ஏதாவது செய்யுங்கள். ஏனென்றால், கடிதப் போக்குவரவைக் கவனிக்க இப்பொழுது என்னால் முடியவில்லை.”

இவ்வாறு கூறிக்கொண்டே, அன்றையதினம் காலை மெயிலில் வந்து, திறந்துபார்க்காமல் போர் போல் குவிந்துகிடந்த கடிதங்களைச் சுட்டிக்காட்டினார்.

“கடிதங்கள் வந்தால், அவைகளைத் திறந்து நான் படித்துப் பார்த்தாகவேண்டுமே!” என்றார்.

நமது நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கத்தக்க மிக முக்கியமான பேச்சுவார்த்தைகளை அப்போதுதான் அவர் மௌண்ட் பேட்டன் பிரபுவுடன் நடத்திக்கொண்டிருந்தார். ஒரு நிமிஷங்கூட வீண்பொழுது போக்கமுடியாத நிலையில் அப்போது காயிதே ஆஸம் இருந்தார்.

பாக்கிஸ்தான் ஸ்தாபிதமான பிறகு ஒருநாள் கராச்சியில் என்னுடன் அவர் பேசிக்கொண்டிருந்தது எனக்கு ஞாபகம் வருகிறது. அப்போது பத்திரிகாசிரியரின் சொந்தக் கருத்தை தைரியமாக வெளியிடவேண்டிய தன் அவசியம்பற்றி அவர் என்னுடன் பேசிக்கொண்டிருந்தார். காயிதே ஆஸம் அவர்களையே குறைகூறி நான் ஏதோ ஒன்று எழுதியிருந்தேன். அதனை அவர் கவனித்திருக்கின்றார் போலும்! நான் எழுதிய அன்று மாலையே காயிதே ஆஸமை நான் காண நேர்ந்தது.

“நீங்கள் எழுதிய கட்டுரையை நான் படித்தேன்” என்று சாதாரணமாக அவர் என்னிடம் கூறினார். அதைத் தொடர்ந்து இன்னும் சில வார்த்தைகள் அவரது வாயிலிருந்து வெளிவந்தன. அந்த வார்த்தைகள் பத்திரிகாசிரியர் அனைவருக்கும் அரியதோர் ‘சுதந்தர சாசனம்’ என்று நான் கருதுகிறேன். ஆசிரியர்களுக்கு அவர் கூறியுள்ள அறிவுரைகளாவன :

**“ஒரு விஷயத்தைப்பற்றி நீங்களே சிந்தித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். அதன்பிறகு ஒரு குறிப்பிட்ட கருத்தைத் தெரிவிக்கவோ அல்லது குற்றங் குறைகளை எடுத்துக்கூறவோ வேண்டுமென்று நினைத்தால், நீங்கள் நினைக்கின்றபடியே எழுதிவிட வேண்டும். யாரையாவது-இல்லை உங்கள் காயிதே ஆஸமையே-அது மனம் வருந்தச் செய்யுமோ என்ற எண்ணத்தின்மீது கருத்தில் உள்ளதை எழுதத் தயங்கலாகாது.”**

பத்திரிகைத் தொழிலுக்கு இதை விடச் சிறந்த மதிப்புரை வேறொன்று இருக்க முடியாது! மனிதர்களுக் குள்ளேயே மிக உயர்ந்த மனிதர்தான் இவ்வளவு சிறந்த முறையில் பேசியிருக்க முடியும்.

தான் கொண்ட கருத்தில் உறுதியுடையவர் சாயிதே ஆஸம். இதன் காரணமாக அவரது



எதிரிகள் அறிந்தோ அறியாமலோ அவரை ‘ஒரே புத்தி’ உடையவர் என்று கூறுவதுண்டு. உண்மையில் முஸ்லிம்களின் சுதந்தரத்துக்குப் பாக்கிஸ்தான் ஒன்று தான் சரியான வழி என்று அவர் தெரிந்துகொண்டார். ஆகவே பாக்கிஸ்தானைப் பற்றியே பேச்சிலும் மூச்சிலும் கனவிலும் நனவிலும் வீட்டிலும் வெளியிலும் உண்ணும்போதும் உறங்கும்போதும் ஓயாமல் ஒழியாமல் பேசிக்கொண்டிருந்தார். இந்த உண்மையை உணர்த்தக்கூடிய ஒரு சம்பவம் எனக்கு நினைவில் வருகிறது. 1946-ம் ஆண்டு மழைக்காலத்தில் அவர் இலண்டனுக்குச் சென்றிருந்தபோது, ஒழுக்கச் சீரமைப்பு இயக்கத்தின் தலைவர் பிராங்க் பச்மன் என்பவர் காயிதே ஆஸமை விருந்துக்கு அழைத்திருந்தார். இரவு சாப்பாடு முடிந்தவுடன் பச்மன் என்பார் ஒழுக்கச் சீரமைப்பைப் பற்றி அழகாகப் பேசிக்கொண்டிருந்தார். 10 நிமிஷ நேரந்தான் காயிதே ஆஸம் அதனைக் கவனித்தார். அப்புறம் பாக்கிஸ்தானைப் பற்றிய பேச்சுக்கு வந்துவிட்டார்! வழக்கம் போல் அவரது கண்களில் நெருப்புப் பறந்தது. பேசும்போது வழக்கமான உறுதி அவரது குரலில் ஒலித்தது. இதற்குப்பிறகு அவர் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருப்பது பச்மனின் முறையாகிவிட்டது! அன்று மாலை முழுதும் அவர் பேசிக்கொண்டிருந்தார்; இவர் கேட்டுக்கொண்டேயிருந்தார்!

காயிதே ஆஸம் அதிகமாக ஓய்வு எடுத்துக்கொள்வதுவழக்கமில்லை. எப்போதாவது ஓய்வு எடுத்தால், அப்போது அவர் வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் பேசிப் பொழுதைப் போக்குவார். இலண்டனில் ஒரு நாள் மத்தியானம் வெளியேசென்று உலாவிவரப் புறப்பட்டோம். லியாக்கத் அலீகானும் ‘ஸ்காட்லாந்து யார்டு’ என்னும் துப்பறியும் போலீஸ்காரர்களும் பின் தொடர, கிளாரிட்ஜ் ஹோட்டலை விட்டுக்கிளம்பி, தெருவில் நடந்து சென்றார். அந்த நேரத்தில் இலண்டன் ரஸ்தாவின் போக்குவரத்து சட்டமெல்லாம் அமல் நடத்தப்படவில்லை என்று அந்த ஸ்காட்லாந்து யார்டைச் சேர்ந்த துப்பறியும் மனிதர்கள் எங்களிடம் கூறினார்கள்.

## தமாஷ்

அநேக சந்தர்ப்பங்களில் அவரது வேடிக்கையான பேச்சைக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன்.

கடைசியாக அவரது பிறந்தநாள் கொண்டாடப்பெற்ற அன்றைய தினம் மாலையில் காலஞ்சென்ற குலாம் ஹுஸைன் ஹிதாயத்துல்லா அவர்களால் ஒரு விருந்து நடத்தப்பெற்றது. விருந்து முடிந்தவுடன் காயிதே ஆஸம் விடைபெற்று வெளியே புறப்படுகின்ற தருணத்தில் பேகம் ஹிதாயத்துல்லா அவர்கள் ‘இமாம் ஸாமின்’ என்னும் ஒருவித கங்கணத்தைக் காயிதே ஆஸமின்

கையில் கட்டி, திருஷ்டிப் பரிகாரம்செய்தார். அப்போது அருகில் நின்றுகொண்டிருந்த என்னைப் பார்த்துக், காயிதே ஆஸம் தமது அலங்கரிக்கப் பெற்ற கையை மெதுவாக ஆட்டிக்கொண்டும் கண்களைச் சிமிட்டிக்கொண்டும், "நான் இப்போது டானைக்கூட எதிர்த்து நிற்கமுடியும்!" என்று வேடிக்கையாகக் கூறினார்.

## இறுதிச் சந்திப்பு

கடைசியாகக் காயிதே ஆஸம் அவர்களை 1948 ஜூன் 27-ந் தேதியன்று ஸியாரத்தில் சந்தித்தேன். பல மாதங்களுக்கு முன்பு இருந்ததைவிட அப்போது அவரது உடல் நலம் எவ்வளவோ தேறியிருந்தது. பாக்கிஸ்தானின் முன்னேற்றத்துக்காக அவர் வகுத்திருந்த வேலைத் திட்டங்களைப்பற்றிச் சுமார் இரண்டு மணிநேரம் அவர் பேசிக்கொண்டிருநதார். அப்போது அவர் வேறு எதைப் பற்றியும் பேசவில்லை. பாக்கிஸ்தான் அரசாங்க பாங்கியின் (State Bank of Pakistan) திறப்பு விழாவுக்காகவே கராச்சிக்கு வந்திருந்த அவர், மேற்படி திறப்பு விழா சம்பந்தமான வேலைகளில் முழு உற்சாகத்துடன் காணப்பட்டார். பாக்கிஸ்தானின் பொருளாதார உறுதிக்கு அந்தப் பாங்கியொரு சிறந்த சின்னமாக விளங்குமென்று அவர் நம்பினார். இதைப் பற்றி அவர் பேசிக்கொண்டிருந்த போது, வழக்கம்போல் நிதானமாக ஒரு இரும்புப்பெட்டியைத் திறந்து, லண்டன் 'இக்கனமிஸ்ட்' என்னும் பத்திரிகையின் பிரதியொன்றை அதிலிருந்து எடுத்து என்னிடம் கொடுத்தார். அந்தப் பத்திரிகையில் பாக்கிஸ்தானின் பொருளாதார வளங்களைப்பற்றிய பல உண்மைகள் காணப்பட்டன.

அங்கேயும் அவர் கவனிக்க வேண்டிய தஸ்தாவேஜுகள் ஏராளமாக இருந்தன. அவைகளைப்பார்த்த நான், அதிகமாக உடம்பை அலட்டிக்கொள்ள வேண்டாமென்று அவரிடம் மன்றாடினேன்.

"அது எப்படி என்னால் முடியும்? முற்றிலும் படித்துப்பார்க்காமல் ஒரு காகிதத்திலும் நான் கையெழுத்துப் போடமுடியாதே!" என்றார்.

இப்படித்தான் அவர் உழைத்தார். இப்படித்தான் நமது அருமைக் காயிதே ஆஸம் அவர்கள், பாக்கிஸ்தானுக்காகத் தமது ஆருயிர் பிரியும்வரை வேலை செய்தார். பாக்கிஸ்தானின் மேன்மைக்காக அவர் கண்ட இன்பக் கனவுகளை இப்படித்தான் நினைவாக்கினார்.

"டெக்கான் டைம்ஸ்"



***ஒரு சமூக அமைப்பிலே தனி மனிதனின் உரிமை ஓரளவு பறிபோனால் ஒழிய, அன்பும் அமைதியும் அழகான வாழ்க்கையும் நிலைபெறுவன்றோ?***

# உரிமை

[என் .ஐ. எம்.]

மனிதன் இயற்கையில் கட்டுத்திட்டமற்ற பிராணி. வரம்புயர்ந்த சக்திகளுக்குப் பணிவு செய்யாமல் உலக வனப்பிலே திளைத்திருப்பது அவனது அவசியமான பண்பு. 'தத்துவம்'றிந்தோர் என்ன சொன்னாலும் இயல்பான தன் உரிமையை இஷ்டபூர்வமாக அவன் விட்டுக்கொடுக்க விரும்புவதில்லை. ஆதி காலத்தில் சமூக நாகரிகம் முதன்முதலாக முளைத்தபோது, திடீரென மனிதர்களை அந்நாகரிகம் கவராமல் விட்ட உண்மையின் மூலம், சுற்றுச் சார்புகளின் நிர்ப்பந்தமின்றி மனிதன் சமூக வரம்புக்குள் வரவில்லை என்று தெரிகிறதல்லவா?

ஆக்கிரமிப்பும் இயற்கை பண்புகளில் ஒன்றுதான். உரிமை வரம்பற்று விரிந்தால் அதைத் தொடர்ந்து வருவது ஆக்கிரமிப்பாகத்தானே இருக்க முடியும்? வலியவனின் உரிமை அதிகரித்து எளியவன்பால் பாய்ந்தது. அம்மாறுதலில் முதன்முதலாக ஆக்கிரமிப்புத் தோன்றியது. இவ்வாறு ஆக்கிரமிப்பு வளர அராஜகம் நிலவிற்று. முடிவில் மனிதன் தன் 'கட்டுத்திட்டமற்ற' உரிமையால் நிலைகுலைந்தான். இடையறாத அதிருப்தியில் தானிருப்பதையுணர்ந்தான். கட்டுக்கோப்பான அமைப்பைத் தேடினான். அன்று சமூக நாகரிகம் தோன்றவில்லை.

சமூகமென்றால் தனி நபர்களின் பரஸ்பர பாசத்தின் விளைவாக வந்த அமைப்பு. இதில் உரிமைக்கு வரம்புண்டு. இங்கு உரிமை ஆக்கிரமிப்பாக மாற முடியாது. மாறினால் அது மிருகப் பண்பு. சிலர் கூற்றுக்கு இணங்க பரிணாம வளர்ச்சியிலே மிருகத்தின் ஆதார அடையாளங்கள் சற்று எஞ்சியிருந்திருக்கக்கூடும். சமூகத்தின் சங்கிலித்தொடர்பிலே தனிமனிதனும் ஒரு கரணையாகிறான். சமூகம் செல்கின்ற வழியிலே அவனும் செல்லுகிறான். இவ்வாறு தனி நபரின் உரிமை ஓரளவு கட்டுப்படுகிறது.

இருபதாவது நூற்றாண்டிலே இந்த கட்டுப்பாடு அவசியமாகவே வலுப்பெறுகிறது. காலமும் நேரமும் வளர்ச்சியின் பாதையிலே இன்று மிகக் குறைவாகக்குறுக்கிடுவதால், ஒரு தனி சமூகம் விசேஷ நிலையடைவதை இன்னொரு சமூகம் பார்த்துக்கொண்டிருப்பதில்லை. இங்குதான் தனி நபரின் உரிமை அவசியமான கட்டுத்திட்டத்துக்குள்ளாகிறது. ஏகபோகக் கூட்டத்தின் நன்மைக்குச் சுய நன்மையை ஓரளவு பலியிட்டால் மட்டுமே பந்தயப் போட்டியிலே வெற்றிகாண முடிகிறது; அல்லது சமநிலையாவது அடைய சாத்தியப்படுகிறது. புனிதமான உரிமையை பெரும் கூட்டமொன்றின் சுயநலனுக்காக இம்

மாதிரி 'இரக்கமற்று' குலைப்பது வலிச்செயல் என கூறுவோரும் உளர். பெருங் கூட்டம் பெறுகின்ற நன்மையை உரிமைகுறைந்த அளவுக்குத் தனி நபரும் அடைகிறான் என்பதை அவாகள் மறந்து விடுகிறார்கள். இங்கு தனிநபரின் பயனும் சமூகத்தின் முழுப் பயனும் இரண்டறக் கலந்து விடுகின்றன. ஒன்றைப் பாதிப்பது மற்றொன்றையும் விடுவதில்லை. விஞ்ஞான வளர்ச்சி முதுமை அடைய அடைய இந்த நெருங்கிய தொடர்பும் உறுதிப்படுகிறது. முடிவில் தனி நபரின் உரிமை அடியோடு மறைந்து போனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

தனி நபரின் வாழ்க்கை யரங்கில் பிரவேசிக்க யாருக்கும் அதிகாரமில்லை யென்று வாதித்தாலும், காலப் போக்கின் 'இயந்திர' வளர்ச்சியில் அந்த வாதம் எங்ஙனம் எதிர்த்து நிற்க முடியும்?

---





***ஆர். எஸ். எஸ். தலைவர் கோல்வால்கர் சென்ற மாதம் சென்னைக்கு வந்திருந்தபோது அவருக்கு மரியாதை செய்வதுபோல் பல தமிழ்ப் பத்திரிகைகள் அவரைப் பற்றிச் சிறப்பாக எழுதின. அவர் நல்லவர்போல் நடித்தாலும் அவரது உண்மை சொரூபம் வேறு விதமாகவே இருந்ததாக அவரை நேரில் கண்டு பேசிய பத்திரிகை நிருபர்களில் ஒருவர் இதனை எழுதுகின்றார்.***

# கோல்வால்கரின் கூற்று

★

சென்ற சில மாதங்களாகக் காவலில் வைக்கப்பெற்றிருந்த ராஷ்ட்ரீய சுயம் சேவக சங்கத் (ஆர். எஸ். எஸ்.) தலைவர் எம். எஸ். கோல்வால்கர் சென்ற மாதம் திடீரென ஒரு நாள் விடுதலை செயயப்பெற்றார்.

இன்று ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான மக்கள் கொண்டாடுகின்ற கோல்வால்கரைப் பற்றியோ, அவரது ஆர். எஸ். எஸ். இயக்கத்தைப் பற்றியோ சென்ற 1948 ஜனவரி 30-ம் தேதி வரையில் நமக்கு ஒன்றுமே தெரியாது. அன்று, காந்திஜி கொலை செய்யப்பட்டவுடன் 1948 பிப்ரவரி 4-ந்தேதி யன்று ஆர். எஸ். எஸ். இயக்கம் சட்ட விரோதமானதென்று சர்க்கார் கூறிய பிறகுதான், அதன் அந்தரங்கமெல்லாம் வெட்ட வெளிச்சமாயிற்று. அது ஒரு மதவெறிபிடித்த பயங்கர, பலாத்கார இயக்கம் என்ற உண்மை அப்போதுதான் பொது மக்கள் அனைவருக்கும் தெரியவந்தது.

1948 பிப்ரவரி 4-ந்தேதி யன்று சர்க்கார் வெளியிட்ட அறிக்கையிலேயே அந்த இயக்கத்தின் விரும்பத்தகாத வேலைகளைப் பற்றிய நீண்ட ஜாப்தா ஒன்று காணப்பட்டது. அதில், கொள்ளை, கொலை முதலிய பயங்கர வேலைகளை அந்த இயக்கம் நடத்தி வந்திருப்பதாகவும், அந்த அறிக்கை கூறுகிறது. சாக்காருக்கு விரோதமாக மக்களைத் தூண்டி விடுவதுதான் அந்த சங்கத்தின் நோக்கம் என்றும் அந்த அறிக்கையில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இதற்குப் பிறகு 6 மாத காலம் அதன் தலைவர் கோல்வால்கர் சிறையில் யில் காவலில் வைக்கப்பெற்றார். எனினும் அந்த இயக்கத்தின் ஆதரவாளர்களின் பகீரத முயற்சியால் கோல்வால்கர் மீண்டும் விடுதலை செய்யப் பெற்றார். இந்த சமயத்தில் நமது பிரதமர் பண்டித நேரு அவர்கள் இலண்டனில் இருந்தார், ஆர். எஸ். எஸ். நடவடிக்கைகளை உள்ளும் புறமும் ஒருங்கே வெறுத்த பண்டிதர் இலண்டனில் இருந்த சமயம் பார்த்து, கோல்வால்கர் புது டில்லியிலே புகுந்து பலமந்திரிகளை நேரில் சந்தித்துப் பேசினார். நேரு அவர்கள் டில்லிக்கு வருகிறவரையில் அவரைக் காணவேண்டுமென்று காத்திருந்தார். ஆனால் பண்டித நேரு அவர்கள் டில்லிக்குத் திரும்பியவுடன் கோல்வால்கரை நேரில் கண்டு பேசவே விரும்பவில்லை. இதற்குப் பிறகு ஆர். எஸ். எஸ். களின் அட்டகாசம்

பொறுக்கமுடியவில்லை. நவம்பர் 3-ந்தேதியன்று கோல்வால்கர் மீண்டும் காவலில் வைக்கப்பட்டார். இதற்குப்பின்னர் ஆர். எஸ். எஸ். களின் 'சண்டியாக்கிரகம்' துவக்கப்பெற்றது. இதற்கு நல்ல புத்தியுள்ள நாட்டுமக்களின் ஆதரவு இல்லையாதலால் இதுவும் படுதோல்வி அடைந்தது.

இதற்குப் பிறகு நமது மாகாணப் பிரமுகர் பட்டியலில் ஒருவராகவும், நேரு, படேல் ஆகியவர்களின் நன்மதிப்பைப் பெற்றவராகவும் இருக்கின்ற டி. ஆர். வெங்கடராம சாஸ்திரியின் முயற்சியால் திடீரென ஒரு நாள் (ஜூலை 12-ந்தேதி) கோல்வால்கர் விடுதலை செய்யப் பெற்றார்- அவரது இயக்கத்தின்மீது இருந்து வந்த தடையும் நீக்கப்பெற்றது. இது பொதுமக்களுக்குப் பெரிய ஆச்சரியத்தை விளைவித்தது. ஏன்? கோல்வால்கரின் விடுதலைக்கும் அவரது இயக்கத்தின் தடை நீக்கத்துக்கும் என்ன காரணம் என்பதை விளக்க ஒரு அறிக்கை கூட சர்க்கார் சார்பில் வெளியிடப்படவில்லை! ஒரு ஜனநாயக சர்க்காரிடமிருந்து பொது மக்கள் இதனை எதிர்பார்ப்பது இயல்பு.

"படுகொலைத் தொழில் புரியும் மதவெறி பிடித்த பயங்கர இயக்க"மென்று சர்க்காரே தீர்ப்புக் கூறிய ஒரு சங்கத்தின் மீது நீண்ட காலமாக இருந்து வந்த தடையை திடீரென நீக்குவதற்கு என்ன காரணம் என்பதைப் பகிரங்கமாக சர்க்கார்சொல்லித்தான் ஆகவேண்டும்.

ராஷ்ட்ரீய சேவக சங்கம் என்றால் என்ன? 1825ம் ஆண்டில் விஜயதசமி தினத்தன்று மேற்படி இயக்கம் தோற்றுவிக்கப் பெற்றது. அதனைத் தோற்றுவித்த கே. பி. டாக்டர் ஹெட்ஜ்வர் என்பவர் அந்த இயக்கத்தின் குறிக்கோள் என்னவென்று கூறியிருக்கின்றார். ஹிந்து மதம், இனம், கலாசாரம் இவைகளின் பாதுகாப்பே அதன் குறிக்கோள் என்று வெட்ட வெளிச்சமாகக் கூறியுள்ளார். கோல்வால்கரும் இதைத்தான் சொல்லுகிறார். ஆனால் இப்போது அது 'வகுப்புவாத இயக்கம்' அல்லவென்று அவரே கூறுகிறார்! அப்படியானால், "வகுப்புவாதம்" என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்று கேட்டால், "வகுப்புவாதம்" என்ற வார்த்தையே புதியது என்று கூறுகிறார்! அதற்கு அர்த்தமும் தனக்குத் தெரியாது என்று முழுப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைக்கப் பார்க்கின்றார், சென்ற மாதம் சென்னைக்கு வந்திருந்த கோல்வால்கர்.

"அது எப்போதுமே ஒரு கலாசார இயக்கமாகத்தான் இருந்து வந்திருக்கிறது" என்று கோல்வால்கர் கூறுகிறார். ஆனால் அதற்கு அரசியல் சம்பந்தம் எப்படி வந்தது? ஆயிரக்கணக்கான அதன் அங்கத்தினர்கள் சிறையில் தள்ளப்படவேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது என்று கேட்டால் "எனக்குத் தெரியாது" என்று மழுப்புகிறார்!

இன்னொரு ஆச்சரியம் என்னவென்றால், இந்தியாவில் விந்திய மலைக்குத் தெற்கே (தென்னிந்தியாவில்) ஹிந்துமத கலாசாரத்துக்கே கேடு சூழும் சக்திகள் இப்போதுவேலைசெய்வது அவருக்குத்தெரியாது என்று கூறுகிறார்!

தென்னிந்தியாவிலே பிராமணர்—பிராமணரல்லாதார் சண்டை நடந்து வருவது ஆர். எஸ். எஸ். தலைவர்களுக்குத் தெரியுமாவென்று கேட்டதற்கு, "அதுவும் தெரியாதே" என்று கூறிவிட்டார்!

சிறையிலிருந்து வெளியே வந்தவுடன் நாட்டிலே தோன்றியுள்ள



மாறுதலைப் பற்றி அறிந்து கொள்ள அவருக்கு நேரமில்லையாம்!

ஹிந்துமத கலாசாரத்தைப் பற்றி அவர் பேசியபோது, "மனித சகோதரத்துவம்" பற்றியும் பேசினார். உண்மையில் அது "மனித சகோதரத்துவம்" அல்ல! "ஹிந்து சகோதரத்துவம்" பற்றியே அவர் பேசினார்! இந்தியாவிலுள்ள ஒவ்வொரு வகுப்பினரும் தங்களின் சொந்தக் கலாசாரத்துக்காகத் தனித்தனியே பல இயக்கங்களைத் தோற்றுவித்தால், அது உலக சகோதரத்துவத்துக்கு உதவ முடியுமா?

"மத சார்பில்லாத சர்க்கார் என்றால் அதற்கு என்ன அர்த்தம்?" என்று கேட்டுக்கொண்டே அதற்கு விடையளிக்கின்றார் கோல்வால்கர்.

"ஹிந்து ராஜ்யமே புராதன காலத்திலிருந்து மதசார்பில்லாத ராஜ்யமாகத்தான் இருந்து வந்திருக்கிறது" என்று அவர் கூறினார். இது ஒருமாதிரி 'பிதற்றல்' என்று எங்களுக்குத் தோன்றியது. உடனே இன்னொரு கேள்வியையும் கேட்டோம்.

"ஹிந்து அல்லாதவர்களும் உங்களின் சகோதரத்துவ இயக்கத்தில் சேர்ந்துகொள்ள விரும்பினால் அதற்குச் சம்மதிப்பீர்களா?" என்று கேட்டோம். இதற்கு அவர் கூறிய பதில் என்ன?

"நாங்கள் மெதுவாகப் போய்க் கொண்டிருப்பதிலேயே நம்பிக்கைக் கொண்டிருக்கிறோம். முதலில் நமது சொந்த வீட்டை சரியாக அமைத்துக்கொள்ளுவோம்."

இதுதான் அவரது பதில். இதில் எங்கே உண்மையும் உறுதியும் இருக்கின்றனவென்று கவனித்துப் பாருங்கள்.

இயக்கத்தின் எதிர்கால வேலைத் திட்டத்தைப்பற்றி சர்க்கார் இவரிடம் என்னவிதமான உத்தரவாதம் பெற்று இவரை விடுதலை செய்ததோ நமக்குத் தெரியாது! ஆனால் எதிலும் பட்டுக்கொள்ளாமல் இவர் பேசுவதை நாங்கள் கவனித்தோம். உதாரணமாக, "சர்க்கார் விரும்பிய மாறுதல்களையெல்லாம் ஆர். எஸ். எஸ். சட்ட திட்டங்களில் சேர்த்துக் கொள்ள ஒப்புக்கொண்டீர்களா?" என்று கேட்டோம்.

"அதற்காக முயன்றிருக்கிறோம்" (we have tried to meet them) என்று பதிலளித்தார்!

"எப்போதுமே பலாத்காரம் உங்கள் கொள்கையல்லவென்று சொன்னீர்கள். அது உண்மையானால், காந்திஜியின் அஹிம்சைக் கொள்கையை உங்கள் சங்கம் ஒப்புக்கொள்ளுகிறதா?"

இது நேரடியான கேள்வி. இதற்கு அவர் கூறிய பதில் வழக்கம்போல் கோணலாகவே இருந்தது!

"அஹிம்சை என்பது புராதனமான கொள்கை. எத்தனையோ மக்கள் அதனைப் பின்பற்றுகிறார்கள்"

இதுதான் கோல்வால்கர் கூறிய பதில்.

"நீங்கள் டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரியுடன் கலந்து பேசினீர்கள் அல்லவா?"

"அவருடன் சேர்ந்து சாப்பிட்டேன்"

கேள்விக்கும் பதிலுக்கும் ஏதாவது சம்பந்தமிருக்கிறதாவென்று பாருங்கள்!

"ஆர். எஸ். எஸ். இயக்கம் எப்போதுமே ஹிந்து கலாசார சம்

பந்தப்பட்டதுதான் என்றால், அரசியலில் அதற்குச் சம்பந்தமேயில்லை என்றால், பின் ஏன் அது சட்ட விரோத மாக்கப்படவேண்டும்? அதன் ஆயிரக்கணக்கான உறுப்பினர் ஏன் சிறைக்குள்ளே தள்ளப்படவேண்டும்?''

"எனக்குத் தெரியாது.''

"தடையுத்தரவு ஏன் திடீரென நீக்கப்பெற்றது?''

"எனக்கு அது ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஆனால் காரணம் தெரியவில்லை அதை நான் அறிந்துகொள்ள வேண்டும்.''

"காந்திஜி கொலை செய்யப்படு முன் அவர் முஸ்லிம்களுக்குச் சாதகமாக இருந்தார் என்று நினைத்தவர்களில் நீங்களும் ஒருவர்தானே?''

"அவர் ஒரு பெரிய மனிதர்; அவரைப்பற்றி அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.''

"நான் ஒரு சங்கோஜி;'' என்று கோல்வால்கர் தன்னைப்பற்றிச் சொல்லிக்கொள்ளுகிறார். ஆனால் அவரது மிதவாத நண்பர் வெங்கட்ராம சாஸ்திரியாரோ வேறு விதமாகச் சொல்லுகிறார்!

"கோல்வால்கர் ஒரு பட்டவர்த்தனமான மனிதர்'' என்று சாஸ்திரியார் சொல்லுகிறார்.

ஆனால் ஆர். எஸ். எஸ். தலைவரைப்பற்றி சிறிது நேரத்தில் நாங்கள் அறிந்துகொண்டது என்னவென்றால், அவர் எதை வெளிப்படையாகச் சொல்லக்கூடாது என்று முன்னரே முடிவு செய்திருந்தாரோ அதை அப்படியே அழுத்தமாக மறைத்துவிட்டார். துவக்க முதல் இறுதிவரையில் அவர்தமது மத வெறியை மறைத்து மறைத்துப்பேசவே முயன்று வந்தார் என்பது எங்களுக்கு மிக நன்றாகத் தெரிந்தது.

---

## அமெரிக்காவிலே

உலகத்தில் உள்ள 6 கோடிக்கு அதிகமான டெலிபோன்களில் 60 சதவிகிதம் அமெரிக்காவில் இருக்கின்றனவாம்.

அமெரிக்காவில் பெண்களுள் உத்தியோகம் பார்க்கின்றவர்களின் எண்ணிக்கை 1940-க்குப் பிறகு சுமார் 4,250,000 வரை உயர்ந்திருக்கிறது என்றும், 1949 ஏப்ரல் வரையில் உத்தியோகம் பார்க்கின்ற பெண்களின் மொத்த எண்ணிக்கை 16,400,000 ஆக உயர்ந்திருக்கிறதென்று அமெரிக்காவின் ஜனக் கணித இலாகா அறிவிக்கின்றது.

ஏறக்குறைய 9 கோடி ரேடியோக்கள் அமெரிக்காவில் இருக்கின்றன. இந்தக் கணக்குப்படி பார்த்தால், இருவருக்கு ஒரு ரேடியோ வீதம் ஆகிறது.






வி. சுந்தரமூர்த்தி

★

## 21. ஐயோ! அவள் மகிழ்ச்சி!

வந்துவிட்டார் அதற்குள்ளா என்மணாளன்
　　அப்படியா வாடீநாம் போவோமென்று
ஏந்திழையாள் தோழியுடன் குதித்து வந்து
　　எதிரினில்பல முதியோரின் இடையமர்ந்த
மந்தகை மஜ்னூனைக் கண்டு மார்பு
　　மடமடென்று அடிக்கின்ற ஆசை தன்னை
முந்தடக்க முடியாது அருவி போன்று
　　முழக்கமிட்டுத் தோழிதனைச் சேர்த்தணைத்து
உள்மறைந்து ஓடிவிட்டாள் மைந்தன் மஜ்னூன்
　　அபின் உண்டான் போலமர்ந்து கண்ணி லின்பக்
கள்ளொழுக அமைந்திருந்தான் செர்வர் அங்கு
　　முதியர்பலர் வாழ்த்தருளே எழுந்து ஆசை
வேல்விழியை அழைப்பதற்குக் கிளம்ப நெட்டை
　　வேலையாள் வந்தன்வர் வரிசையொடு
தள்ளமுடியாப் பொருள்கள் தூக்கி வந்து
　　தடுமாறுகின்றான் நம் வாயில் நின்று
என்றுரைத்தான் விரைந்து அன்வர் வெளியில் செல்ல
　　ஏறிவந்த ஹூர்திகீழ் வீழ்ந்த தாலே
கன்னெஞ்சன் கொடுமையெண்ணிக் கழுத்திற் போட்ட
　　மாலையினை எறிந்துவிட்டு மஜ்னூன் அப்பா

வஞ்சித்து விட்டான் இக் கள்ளன் நம்மை
கொல்கின்றேன் அவனை இதோ காண்மி னென்று
பஞ்சு வெள்ளைத் தாடியெலாம் அடக்க வும்மேல்
பாய்ந் தெழுந்து குதிப்பானை அம்ரி கட்டி
எங்கிருக்கின் றோம்நாம் நீ மறந்து விட்டாய்
என்றுரைக்க அறிந்துவிட்டேன் திருடன் வீட்டில்
பொங்குகின்ற தென்மனத்தி என்றுகத்தி
புரண்டெழுந்த சிங்கம்போல் துடித்து நிற்கும்
தங்கமகன் முன்வெளியிற் சென்று அன்வர்
தந்தபல பொருள்நகைகள் பட்டு வேட்டி
பொங்குநுரைப் புடவைகள் செல்வ மெல்லாம்
அடிமைகளின் தலையினின்று இறக்கி வந்த
அன்வருக்கு மது கொடுத்து அமரச் சொல்லி
மீளவந்தான் செர்வர்கண் எரிய மஜ்னூன்
பொன்பேயன் இவன் என்னை விடுங்கள் கொன்று
போடுகின்றேன் எனஅலற அலறி செர்வர்
என்னுட்கள் எங்கே வா ருங்கள் இங்கே
இளிக்கும்வாய் பிச்சைக் காரன் இந் நானயப்
பின்னுங்கள் எனக்கத்தி விரைந்து உள்ளே
பேய் போலச் சென்றான் அங் கெழுந்து நிற்கும்
முதியோர்கள் செய்வதென்ன என்று எண்ணி
மூங்கையாய்ச் சமைந்திருந்தார் லைலா உள்ளே
சதிராடு கின்றாளே இங்கு மங்கும்
தன்மஜ்னூன் வரிசைஇந்த நகைக ளென்று
புதிதாக எடுத்தெடுத்துப் போட்டுப் போட்டு
எப்படிநான் இருக்கின்றேன் சொல்லடீ நீ
கதிர்த்தோடு எப்படி இக் கன்ன மீது
இவ்வட்ட மணியென்ன ஆகா என்று
துடித்தங்கு பறக்கின்ற செவ்வினைய ஓர்
துடுக்குப்பெண் உனக்கென்ன அம்மா தங்க
முடிமன்னன் மனைவிக்கு இதுமட்டும்மா
முக்காட்டைப் பொன்னாலே செய்த ளிப்பான்
அடியின்கீழ் இனிநாங்கள் என்று சொல்ல
அப்படியா என்னமா சொல்லு என்று
அடிபட்ட மீன் போல துள்ளி வீழ்ந்து
நகையெல்லாம் துடுக்குப்பெண் மேலேவீசி
இருக்கின்ற புனைபொருள்கள் குலைந்து மோத
உடைத்தாளே அன்னைதன் கணவன் செய்த



எரிக்கின்ற கொடுமையினை அறிந்த வர்க்கு
இப்படியா அறிவென்று சினந்து நெஞ்சில்
விரிகின்ற ஆத்திரத்தால் தானுமங்கு
விளங்குகின்ற கலன்களெலாம் தூக்கி மோதி
எரிகின்ற வேளையிலே தந்தை வந்தான்
எழில்மகளும் அன்னையும் நடுங்கி னார்கள்.
என்னஇது என்றலற செர்வர் அன்னை
என்னநான் செய்துவிட்டேன் என்று சொல்ல
இன்னேபோ வெளியில்நீ என் றதட்டி
அன்னைபின் மறைந்துநின்று துடித்து ஆடும்
சின்னவுடற் சிறுமியினை நிறுத்தி வாடா
சவுக்கென்று விரைவினிலே என்று வாங்கி
பொன்னுடலைக் கிழித்து செம் பவளம் போன்று
புண்ரத்தம் சிந்துமாறு பெண்து டித்து
ஐயோஐ யோஎன்று அலற கொஞ்சம்
அணுஇரக்க மின்றிபேய் அடிக்கின்றானே
மெய்யழகன் மஜ்னூனோ வெளியிருந்து
மிகவலிய கதவினைத்தன் தலையைக் கொண்டு
கைபிடித்து பலர்தடுக்க மீறி மோதி
கண்மணிலை லாவென்று கதறு கின்றான்
செய்யமக ளின்அழுகை சென்று தேய
செர்வரினைப் பாருங்கள் பொன்னைக் காக்கும்
இரக்கமிலா அரக்கன் லைலாவைப் பெண்ணை
அடிக்கின்றான் கொடுமையினை எண் ணுங்கள்என்
சுரக்கின்ற அமுதாளை இவன டிக்க
உரிமையுண்டோ என்மனைவி அவளை தந்தை
உரிமையுந்தான் கைநீட்ட விடுமோ இங்கு
உலகினிலே பணத்துக்கு மதிப்பு அந்த
செருக்கன்றோ இங்கிவனை இந்த வண்ணம்
செயச் சொல்லும் இவ்விடத்து வந்திருக்கும்
நீங்களெலாம் அடக்குதற்கும் இவன்இ ணங்கான்
துரும் பென்றும் உமைமதியான் அவன்திருந்தான்
தாங்குதற்கு நீர்செல்வீர் இவ் வழக்கம்
தலைவிரித்து ஆடுவதால் குடிமக் கட்கு
ஏங்குதலே பெருந் தொழிலாம் அறத்தின் தட்டு
இப்பணக்கா ரர்பக்கம் சாயுமன்றி
தூங்காது நம்பக்கம் இதைவளர்த்தால்
தொலைந்துவிடு மிச்சமூகம் சொன்னேனென்றும்
பெண்கொடுக்கும் சமயத்தில் மறுத்துச் சென்றான்
அவன்நாவை அறுப்பதற்கு ஆட்களுண்டா

என்றனுக்கு வாழ்வில்லை ஒன்று மில்லை
இனியெனக்கு உலகமெலாம் பாலை இன்னே
பொன்னுயிரை வெறுத்தேன்நான் மறைந்து போவேன்
பொதுமகள்போல் ஏமாற்றும் கொடுமை மட்டும்
என்னுடலம் அழிந்தாலும் எண்ணும் ஆவி
இப்பொழுதே செல்கின்றேன் என்று போர்த்த
சட்டையினைக் கிழித்தெறிந்து தடுக்கும் அன்பின்
தந்தையின்கை உதறிவிட்டு விரைந்து சென்றான்
கட்டழகன் செல்வதனைக் கண்டு மக்கள்
கதறுகின்றார் நீர்வடித்தார் நான்வளர்த்து
விட்டுவிட்ட சிறுகுழந்தாய் என்றுகூவி
விரைந்துபினர் ஓடிவந்த தந்தையின்கண்
எட்டாத சேய்மையிலே மறைந்தே போனான்
எழில்லைலா காதலினால் மைந்தன் மஜ்னூன்

---

## அயல் நாடுகளில் எமது ஏஜெண்டுகள்

**அப்துஸ் ஸலாம்,**
நியூஸ் ஏஜெண்டு,
*176*, சிராங்கூன் ரோட்,
சிங்கப்பூர்.

---

**K. மதார் சாஹிப்,**
ஓரியண்டல் நியூஸ் மார்ட்,
*166*, கெய்சர் வீதி,
கொழும்பு.

---

**முஸ்லிம் ஹோட்டல்,**
கண்டி, (சிலோன்).

---

**ஏ. ஏ. மஜீது,**
சவுத் இந்தியா புக் டிப்போ,
*326*, முகமல் வீதி,
இரங்கூன்.

---

**நவீன கதா வாசக புத்தக சாலை,**
*81*-B, சோலியா ஸ்ட்ரீட்,
பினங்கு (மலேயா).

---



***அண்மையில் ப்ரொபஸர் ஸி. என். வக்கீல் எழுதியுள்ள "பிரிவினையின் விளைவுகள்" என்னும் புத்தகத்திலிருந்து.***

# இந்தியாவும் பாகிஸ்தானும்

ப்ரொபஸர் ஸி. என். வக்கீல்

பிரிக்கப்படாத இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் 80 சதவிகித மக்கள் இப்போது இந்தியாவில் இருக்கின்றனர்.

பாக்கிஸ்தானின் மொத்த ஜனத் தொகையில் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் கிழக்குப் பாக்கிஸ்தானில் (கிழக்கு வங்காளம்) மட்டும் இருக்கின்றனர். கிழக்கு வங்காளத்தின் நிலப் பரப்பு முழுப் பாக்கிஸ்தானின் மொத்த பரப்பளவில் நாலில் ஒரு பங்கேயாகும்.

இந்திய யூனியனில் உள்ள மொத்த நிலப்பரப்பில் ஏறத்தாழ சரிபாதியில் சமஸ்தானங்கள்-இந்திய மன்னர்களின் ஆட்சியில்-இருக்கின்றன.

இந்திய மக்களிற் பெரும்பாலோர் கிராமிய-நாட்டுப்புர-மக்கள். பாக்கிஸ்தான் மக்களிற் பெரும்பான்மையர் நகரங்களிலேயே வாழ்கின்றனர்.

நாட்டுப் பிரிவினையால் சிறுபான்மை சமூகப் பிரச்னைகள் தீரவில்லை. இந்திய யூனியனில் இப்போதுள்ள முஸ்லிம்களின் எண்ணிக்கை, சுமார் 4 கோடி. இவர்கள் இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் 12 சதவிகிதமாக இருக்கின்றனர். அதாவது, நூற்றுக்குப் பன்னிரண்டு பேர்கள் வீதம் முஸ்லிம்களாயிருக்கின்றனர்.

பாக்கிஸ்தானில் சுமார் 2 கோடி முஸ்லிம் அல்லாதவர்கள் இன்று இருக்கின்றனர். அதாவது பாக்கிஸ்தானில் உள்ள மொத்த ஜனத் தொகையில் 28 சதவிகிதம் முஸ்லிம் அல்லாத மக்களாக இருக்கின்றனர்.

பஞ்சாப்பில் ஏற்பட்ட ஜனப் பரிவர்த்தனையால் மேற்கூறிய கணக்கில் சிறிது ஏற்றத்தாழ்வு இருக்கலாம். அதாவது இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் இன்றைய எண்ணிக்கை $3\frac{1}{2}$ கோடி, அல்லது $11\frac{1}{2}$ சதவிகிதம். பாக்கிஸ்தானில் உள்ள இன்றைய மொத்த ஜனத் தொகையில் முஸ்லிம் அல்லாதவர் எண்ணிக்கை $1\frac{1}{2}$ கோடி ; அல்லது 18 சதவிகிதம். பஞ்சாப் கலவரத்தின் விளைவாக மேற்குப் பாக்கிஸ்தானில் இன்றுள்ள மக்களிற் பெரும்பாலோர் முஸ்லிம்களாகவே இருக்கின்றனர் ; கிழக்குப் பஞ்சாப்பில் பெரும்பாலும் ஹிந்துக்களும் சீக்கியர்

களுமே இருக்கின்றனர். எனினும் நூற்றுக்கு நூறு ஜனப் பரிவர்த்தனை செய்வது முடியாத காரியமாகவே ஆகிவிட்டது.

இரண்டு நாடுகளிலும் விவசாயமே ஜீவாதாரமான தொழில். விவசாயத்தில் பாக்சிஸ்தான், இந்தியாவைவிட முன்னணியிலேயே இருக்கிறது. ஏனெனில், பாக்கிஸ்தானில் உள்ள விவசாய நிலங்களில் 37 சதவிகிதம் வரை நீர்ப்பாசன வசதியைப் பெற்றிருக்கிறது. இந்தியாவிலோ விவசாய வசதியுள்ள பூமியில் 17 சதவிகித நிலங்களுக்குத்தான் நீர்ப்பாசன வசதி இருக்கிறது. பாக்கிஸ்தானின் பெரும்பாலான நீர்ப்பாசன நிலங்கள் மேற்குப் பாக்கிஸ்தானிலேயே இருக்கின்றன. மேற்குப் பாக்கிஸ்தானில் தேவைக்கு அதிகமான உணவுப் பொருள்--கோதுமை--உற்பத்தியாகிறது. ஆனால் கிழக்குப் பாக்கிஸ்தானில (கிழக்கு வங்காளம்) உற்பத்தியாகின்ற அரிசியோ அங்குள்ள மக்களின் தேவைக்கே போதியதாக இல்லை.

இந்திய யூனியனில் உற்பத்தியாகின்ற உணவுப் பொருள் அதன் மக்களின் தேவைக்குப் போதியதாக இல்லை.

பாக்கிஸ்தானில் பருத்தியும் சணலும் தேவைக்கு அதிகமாக விளைகின்றன. ஆனால் அவைகள் இரண்டும் இந்தியாவில் உள்ள ஆலைகளுக்குத் தேவைப்படுகின்றன.



இந்தியாவையும் பாக்கிஸ்தானையும் ஒப்பிட்டுப் பார்த்தால், பாக்கிஸ்தானிலேயே பலவித முக்கியமான பொருள்கள் உற்பத்தியாகின்றன. அங்கே விளையும் சணலைப் பொறுத்தவரையில் அது அருமையானதாகவும் மிக அதிக அளவிலும் விளைகிறது. பருத்தி, அரிசி, கோதுமை ஆகியவைகளை எடுத்துக்கொண்டால், இந்தியாவில் விளைகின்ற அவ்வளவுக்குப் பாக்கிஸ்தானில் விளையவில்லை என்பது உண்மை. எனினும் பிரிக்கப்படாத இந்தியாவின் மொத்த ஜனத்தொகையையும் நிலப்பரப்பின் அளவையும் ஒப்பிட்டுப் பார்த்தால், இப்போது பாக்கிஸ்தானுக்குக் கிடைத்துவருகின்ற உணவுப் பொருள்கள் மிக அதிகம் என்றே கூறவேண்டும்.

புகையிலை, கடுகு முதலியவைகள் பாக்கிஸ்தானில் தேவைக்கு அதிகமாகவே கிடைக்கின்றன. ஆனல ராக்கிஸ்தானில் நிலக்கடலை அறவே விளையவில்லை. இரப்பரும் காப்பியுங்கூட அங்கே இல்லை! தேயிலையும் சர்க்கரையும் தேவைக்குப் போதுமான அளவுக்கு அங்கே விளையவில்லை.

(நிலக்)கனிப் பொருள்களைப் பொறுத்தவரை இந்திய யூனியன், பாக்கிஸ்தானுக்குப் பல படிகள் முன்னேயுள்ளது. மின்சாரத்திலும் இந்தியாதான் முன்னணியில் இருக்கிறது.

இந்தியாவில் தொழிற்சாலைகள் மிக அதிகம். பிரிக்கப்படாத இந்தியாவின் 90 சதவிகித தொழிற்சாலைகள் இந்திய யூனியனில் இப்போது இருக்கிறது.

தொழில் வளர்ச்சியில் பாக்கிஸ்தான் மிகவும் பின்னணியில் இருக்கிறது. பிரிக்கப்படாத இந்தியாவில் இருந்த தொழிற்சாலைகளில் 10 சதவிகிதமே இப்போது பாக்கிஸ்தானில் இருக்கிறது. 7 சதவிகித தொழிலாளர்களே பாக்கிஸ்தானில் இருக்கின்றனர்.

பாக்கிஸ்தானில் முக்கியமான சில தொழிற்சாலைகள் இடம் பெறவில்லை. எனினும், இந்திய யூனியனுக்கு உணவுப் பொருள்கள் சிலவற்றை—முக்கியமாக கோதுமையைக் கொடுத்துதவும் நிலையில் பாக்கிஸ்தான் இருக்கிறது. பாக்கிஸ்தானிடமிருந்து இந்தியாவுக்குக் கொஞ்சம் பஞ்சும் தேவைப்படுகிறது. ஆனால் பாக்கிஸ்தானுக்குத் தேவையான சர்க்கரையை இந்தியா 'சப்ளை' செய்யமுடியும். நிலக்கரியைப் பொறுத்தவரை பாக்கிஸ்தானுக்கு இந்தியாவே உதவி புரிய வேண்டும். எஃகும் சிமண்டும் கூட இந்தியாவிலிருந்துதான் பாக்கிஸ்தான் பெறவேண்டிருக்கிறது.

சணலைப் பொறுத்தவரை, இந்தியாவிலுள்ள சணல் ஆலைகளுக்குப் பாக்கிஸ்தானில் விளைகின்ற சணல் தேவைப்படுகிறது. பாக்கிஸ்தானிலுள்ள சணல் உற்பத்தியாளர்கள் முக்கியமாக இந்தியா (கல்கத்தா)விலுள்ள சணல் ஆலைகளையே சார்ந்திருக்கவேண்டியிருக்கிறது. பாக்கிஸ்தானில் உற்பத்தியாகின்ற சணலை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கும் ஓரளவிற்குக் கல்கத்தா வியாபாரிகளே உதவிபுரியவேண்டும்.

எல்லா விஷயங்களையும் கணக்குப்போட்டுப் பார்த்தால், பாக்கிஸ்தான் செய்யக்கூடிய ஏற்றுமதி-இறக்குமதி வியாபாரத்தில் ஆண்டு ஒன்றுக்கு 47 கோடி ரூபாய் அதிக மதிப்புள்ள பொருள்களைப் பாகிஸ்தான் இந்தியாவிக்கு ஏற்றுமதி செய்கிறது.

பிரிக்கப்படாத இந்தியாவின் பழைய ஏற்றுமதி வியாபாரம் இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கு மிடையே 80 : 20 என்ற முறையில் (பங்கில்) இருந்தது. இறக்குமதியோ 85 : 15 என்ற அளவில் இருந்தது. எனவே, வியாபாரத்துறையில் பாக்கிஸ்தான் உந்தியாவைவிட நல்ல நிலையில் இருக்கிறதென்பது தெளிவு. ஆனால் பாக்கிஸ்தான் பெரும்பாலும் இந்தியாவுடன்தான் வியாபாரத் தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டும். இந்திய யூனியனோ பாக்கிஸ்தானைவிட வெளிநாடுகள் பலவற்றுடன் அதிக வியாபாரத் தொடர்பு உடையதாயிருக்கிறது.

அன்னிய நாடுகளுடன் நாணயப் பரிவர்த்தனையைப் பெறுவதற்கு ஏற்றுமதி வியாபாரத்தைப் பெருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இதற்கு, வெளிநாடுகளில் தேவைப்படு

கின்ற இந்தநாட்டுப் பொருள்களை மிக அதிகமாக உற்பத்தி செய்தாலொழிய ஏற்றுமதி வியாபாரத்தை அபிவிருத்தி செய்யமுடியாது. நமது ஏற்றுமதி சரக்குகளின் மதிப்பு குறைந்தால், இறக்குமதி சரக்குகளை வாங்கும் சக்தியும் நமக்குக் குறைந்துவிடுகிறது.

பாங்கிகளைப் பொறுத்தவரையில், பாக்கிஸ்தான் எப்போதுமே பின்னணியில்தான் இருக்கிறது. பஞ்சாப்பில் ஏற்பட்ட கலவரங்களால் மேற்குப் பாக்கிஸ்தானில் இருந்த பாங்கிகளெல்லாம் மூடப்பட்டுவிட்டது காரணமாகவும் நிலைமை மோசமாகிவிட்டது. இன்ஷியூரன்ஸ் தொழிலும் அப்படித்தான். ஏனெனில், முன்னமே பாக்கிஸ்தானில் இருந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளிற் பல இந்திய யூனியனுக்கே வந்துவிட்டன. பஞ்சாப் கலகங்களால் அங்கிருந்த இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளுக்கு ஏற்பட்ட அதிகமான நஷ்டங்கள் காரணமாகவும் பல கம்பெனிகள் நொடித்துப் போயின!

வருவாயைப் பொறுத்தவரையில் இந்திய மத்திய சர்க்காருக்கு வருடம் ஒன்றுக்கு 225 கோடி ரூபர் கிடைக்கிறது. பாக்கிஸ்தானுக்கு 35 கோடிதான் கிடைக்கிறது. இந்திய மாகாணங்களின் வருமானம் 156 கோடி. பாக்கிஸ்தான் மாகாணங்களின் வருமானம் 46 கோடி. இது 1948-49-ம் வருட சர்க்கார் வரவுசெலவு திட்ட அறிக்கைகளிலிருந்து எடுக்கப்பட்ட விபரம். பாக்கிஸ்தானின் மொத்த வருமானத்தில் 75 சதவிகிதம் தற்காப்புக்காகச் செலவிடப்படுகிறது. இதன் காரணமாக மாகாணங்கள் விதிக்கின்ற வியாபார வரி போன்ற சிலவற்றைப் பாக்கிஸ்தான் மத்திய சர்க்காரே எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட பங்குப் பிரிவினையின் போது சுமார் 400 கோடி ரூபாயைப் பாக்கிஸ்தானுக்கு இந்தியா அதிகமாகக் கொடுத்திருக்கிறது. எனினும் இந்தக் கடனைத்தீர்ப்பது பாக்கிஸ்தானுக்கு எளிது. ஏனென்றால் பாக்கிஸ்தானில் ஏற்றுமதியாகின்ற உபரிப் பொருள்களின் வருட வருமானம் சுமார் 47 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்படுகிறது.





ஒரு நாட்டின் பெருமையும் சிறுமையும் அதனை ஆளுகின்ற மக்களின் நாணயம், நேர்மை, வாய்மை ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது.

# ஆளவந்தார் சிந்தனைக்கு

தூத்துக்குடி எம். முஸ்தபா ஹுஸைன்.

"If you want to become the real rulers, you aught to become the servants of your people like Omar, the Great." (M. K. **Gandhi**—1937).

'உண்மையான ஆட்சியாளர்களாக யிருக்க நீங்கள் விரும்பினால், கலீபா உமரைப் போன்று நீங்கள் மக்களின் பணியாளர்களாகத் திகழ வேண்டும்'.

*1937*-இல் மகான் காந்திஜி அவர்கள் அன்றைய ஆளவந்தார்களுக்கு எடுத்தியம்பிய பொன்மொழிகளிவை. அதே மொழிகளை, இன்று காந்திஜி உயிரோடிருக்கும் பட்சத்தில் மீண்டும் இன்றைய அரசாங்கத்தாருக்கு எடுத்துரைக்கும் அவசியத்திற் குள்ளாகி யிருப்பார் அந்த அளவிற்கு இன்றைக்கு நாடாள்வோர் ஒருசிலரிலிருந்து நாட்டுப்புறத்தான் வரை, லஞ்சமும் ஒழுக்கக் குறைவும் மலிந்து கிடப்பதை—நாம் எடுத்தியம்பினால்தான் சுடு சொல்லிற்கும், வீண் சந்தேகத்திற்கும், பாதுகாப்புச் சட்டத்திற்கும் ஆளாக வேண்டும்—உலகறிய, ஒரு ஸதாபனத்தின் உண்மைத் தொண்டர்கள், தலைவர்கள் தலை குனியும்படியாக, ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு மகத்தான (?) கட்சியின் பிரபலஸ்தர்களே வெட்டவெளிச்சமாக்கி வருகிறார்கள், நீண்ட தெளிவான பட்டியல் விபரத்தோடு. அரசியலிலே பித்தலாட்டம், சமுதாயத் துறையிலே சிக்கலான பிரச்னை, பொருளாதாரத்திலே மந்தம், தொழில் உலகத்திலே நெருக்கடி, பட்டப்பகலிலே பதவியின் பேரால் கள்ள மார்க்கெட் கொள்ளை, மக்களிடையே மாச்சரியம், திரை மறைவிலே ஒரு கும்பலின் நாசகார சதித் திட்டம், கோட்டைக்குள்ளே குத்துவெட்டு! இவைகளை நித்தநித்தம் நாம் கண்டு வருகிறோம் என்றால், எங்கோ, யாரோ எப்போதோ, 'ஒழுக்கம்' என்ற விழுமிய பண்பை ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டார்கள் என்ற முடிவுக்குத்தான் வர முடியும். 'ஒரு நாட்டின் பெருமையும் சிறுமையும் ஆளும் வர்க்கத்தின் நாணயம், நேர்மைத் திறன், யோக்கியப் பொறுப்பு, வாய்மை யுடைமை, இவைகளைப் பொறுத்தே யிருந்துவரும் என்பது சரித்திரம் தந்த பாடம். நாட்டு மக்களின் வாழ்வின் விதியை நிர்ணயிக்கும் மகத்தான பொறுப்பை ஏற்று, ஆட்சிக் கடிவாளத்தை இழுத்துப் பிடித்திருப்போரிடையே இன்று போட்டி மனப்பான்மை, லஞ்சத் தாண்டவம், தன்னலப் பற்று, எதேச்சாதிகாரத் தன்மை, ஒழுக்கந் தவறிய செயல்கள், ஓர வஞ்சனை ஆகியவைகள் தாண்டவமாடி ஆட்சிக் கிடங்கிலே துர்நாற்றம் வீசுமளவிற்கு நிலைமை சீர்கேடாகி விட்ட சேதிகள் ஆட்சியாளர்கள் ஓட்டிக் கொண்டிருக்கும் கட்சியிலிருந்தே

கிளம்பிக் கொண்டிருப்பது இன்று நித்திய நிகழ்ச்சியாகி விட்டது. மேடையிலே, மக்கள் மன்றத்தின் முன்னே எந்த நியாயத்தை எடுத்துப் பேசி, எந்த லஞ்சப் பேயை ஒழிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறார்களோ, அதே தலைவர், அதே மகானுபாவர்கள் சிலர் திரை மறைவிலே அந்த லஞ்சப் பேயுடன் கொஞ்சிக் குலாவிக் களிநடனமாடி பள்ளு பாடுகிறார்கள் என்ற ரகசியத்தை (?) அம்பலத்திற்குக் கொண்டு வந்தாகி விட்டது! ஊருக்கு உபதேசம் செய்யும் இந்த உத்தமோத்தமர்கள் தங்கள் சொந்த விஷயத்தில் மட்டும் ஒழுக்கத்தை, சட்டத்தை, நீதியை காற்றிலே பறக்கவிட்டுத் தற்பெருமைபேசுகிறார்களே அவர்களுக்கு, கீழே வரையும் எழுத்தோவியத்தை அர்ப்பணஞ் செய்கிறேன்.

மனிதன் ஒருவனுக்கு முதன் முதலில் மனதிலே ஆசைதோன்ற, அதன் விளைவாகக் கையேந்தி லஞ்சம் வாங்க, வாங்கியதின் காரணமாக நாணயம் மாசுபெற, அதிலிருந்து—ஒழுக்கத்திலிருந்து வழுக்கி விழ, விழ்ந்ததின் பயனாக அதை மறைக்க அல்லது எடுத்துக் கூறுவோரை அடக்கியொடுக்க அதிகாரத்தைப் பிரயோகிக்க முற்பட, அதிகாரம் இவ்வாறு துஷ்பிரயோகம் செய்யப்படுவதன் விளைவாக, நாட்டிலே கொந்தளிப்பு, மக்களிடையே கொதிப்பு, ஆட்சியிலே அராஜகம் இவையெல்லாம் அடுத்தடுத்து முளைத்து நாட்டைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விடும்.

எனவே, லஞ்சப் பேயை யொழிக்க வேண்டுமா? நீதிக் குலைவு சீராக்கப்பட வேண்டுமா? ஆட்சி நல்லாட்சியாக, மக்கள் மதித்து நடக்கும் ஜனநாயக ஆட்சியாகத் திகழ வேண்டுமா? நாட்டிலே ஒழுக்கம், அமைதி, சாந்தி நிலவ வேண்டுமா? ஆம், அவசியம், தேவை யென்றால் இஸ்லாமிய சட்டத்தை, இஸ்லாம் வகுத்துக் கொடுத்த ஆட்சி முறையை, கடைப்பிடிப்பதைத் தவிர வேறு மார்க்கம் இந்த உலகத்தில் இருக்க முடியாது என்ற முடிவிற்கு காந்திஜி அவர்களே வந்து விட்ட பிறகு நாமென்ன கூற வியலும்! இஸ்லாத்திலே யுள்ள நடைமுறைத் திட்டங்கள் ஜாதி மத நிற குல பேதமின்றி, தத்தமது சொந்த மதங்களுக்கு ஊறு விளையாத முறையில், யாவராலும், எக்காலத்திலும், எவ்விடத்தும் காரியமாற்றத் தகுதி பெற்றவை. அறிஞர் வாஸ்வானியின் நடையிலே கூற வேண்டுமானால் "The secular order of Islam is for the welfare of all the peoples of the world and can be adopted by non-Muslims without, in the least, prejudicing their own religion."

உலக வரலாற்றுச் சுவடிகளைப் புரட்டிப் பார்க்கும்போது கலீபா உமர் அவர்களின் காலத்தில் லஞ்ச ஒழிப்புத் திட்டம் பூரணமாக நிறைவேறி, சுத்த சத்திய நல்லாட்சி நடந்ததுபோல் வேறெந்த ஆட்சியும் இந்த நாகரிக காலத்திலும்கூட நடந்ததில்லை. நடத்துமளவிற்கு திண்மையும் உண்மையும் பூண்ட நீதிமான்கள், உமர்கள் கிடைக்கவில்லை. நாணயம், உண்மை, இவ்விரண்டுமே அன்றைய கலீபாவின் ஆட்சியின் கேடயங்களாக, நெறிநிலை தவறா நற்பாட்டையிலே இழுத்துச் செல்லும் சாரதிகளாகத் திகழ்ந்து வந்தன. ஹஜ்ரத் உமர் ஆட்சி பீடத்திலே ஏறிய மறுகணத்திலே மக்களையும், அதிகாரிகளையும் இலஞ்சக் குழியில் வீழாதபடி தடுக்க எத்தகைய வழிமுறைத் திட்



டம் தேவையா யிருந்ததோ அதை உடனடியாக வகுத்தார். வகுத்த திட்டத்தை சட்டமாக்கி அச் சட்டத்தின் கீழ் ஆண்டான் அடிமை யென்ற பேதமின்றி நெறி தவறிய யாவரையும் குற்றக் கூண்டிலே கொண்டுவந்து நிறுத்தி நீதி வழங்கினார். கவர்னர்களை, உயர்பதவி உத்தியோகஸ்தர்களை, பதவியில் அமர்த்துவதற்கு முன்னால் அன்னவர்களின் பூர்வீகச் சொத்துடைமைகளைப் பற்றிய கணக்கெடுத்துக் கொள்ளல் வேண்டுமென்பது உமரின் ஆணை. அவ்வாறு செய்தபின், பதவியிலிருக்கின்ற அதிகாரிகளின் நடத்தையைக் கவனிக்க, தகுந்த ரகசிய கண்காணிப்புப் போடப்பட்டிருந்தது.

ஒருநாள் ஹஜ்ஜுப் புனிதத் தினம். பல்வேறு தேய மக்கள் பல்லாயிரக்கணக்கில் குழுமியிருக்கும்சமயம்அது. அம்மாபெரும்கூட்டத்தின் முன்னிலையிலே கலீபா ஹஜரத் உமர் அவர்கள் எழுந்து நின்று உரத்த குரலிலே பேசுகிறார்: "தமக்குரிய பணியிலிருந்து, தனது தலையாய கடமையிலிருந்து தவறிய அல்லது பணியை நிறைவேற்றி வைக்க மறுத்த, லஞ்சம் வாங்கியதாகக் கருதப்படுகிற, தனக்குள்ள அதிகாரத்தை வீணே, வீம்பாக பிரயோகஞ் செய்த கவர்னர்கள், மேலதிகாரிகள் எனது ஆட்சியில் யாராவது இருக்கிறார்கள் என்று எடுத்துரைக்க இந்த ஜன சமுத்திரத்திலிருந்து பகிரங்கமாக யாராவது என் முன்னே வர முடியுமா?"

எங்கும் ஒரே அமைதி! மௌனத்தைக் கிழித்துக்கொண்டு ஒரு தொனி! ஆம்! எங்கிருந்தோ ஒரு மூலையிலிருந்து ஒரு மெல்லிய உருவம்—ஆனால் கம்பீரத் தொனியுடன் கூடிய தோற்றம்—உமரை நாடி வந்து, "நீதியின் உறைவிடமாகிய உமரே! தங்கள் ஆட்சியிலே, அகாரணமாக விசாரணையின்றி நிரபராதி யொருவனை நையப் புடைத்து வெங் கொடுமைச் சிறையில் தள்ளுவதற்கு உரிமைபெற்ற எதேச்சாதிகார கவர்னர்—அதோ அங்கு ஆஜானுபாகுவாக நிற்கிறாரே அந்தப் புண்ணியாத்மா—அவரை யழைத்துக் கேளுங்கள். இதோ அடிபட்டானே இந்த ஏழையின், அனாதையின் தழும்பேறிய முதுகைச் சிறிது பாருங்கள். நீதிக்காகக் கையேந்தி நிற்கிறேன். என்ன விடை தருகிறீர்கள் அமீருல் மூமினீன்?"

அதே இடத்திலே, அதே நிமிடத்திலே பகிரங்க விசாரணை நடக்கிறது. அடிபட்ட அவ்வேழைக் குடிமகன் நிரபராதியென நிரூபிக்கப்படுகிறது. இதோ உமரின் தீர்ப்பு: "எந்தக் கவர்னர் அந்தக் குடிமகனுக்கு எத்தனை முறை கசையடி தந்தாரோ, அந்த கவர்னரை, அத்தனை முறை, அந்தக் குடிமகன் கசைகொண்டு அடிக்கவேண்டும், ஆயிரக்கணக்கான மக்கள் மன்றத்தின் முன்னிலையிலே. அதன்பின் குடிமகன் அனுபவித்த சிறைவாச காலத்தை யொட்டி கவர்னரும் சிறைச் சாலைக்குள் அடைக்கப்பட வேண்டும்."

இந்தக் கடுமையான தீர்ப்பைக் கேட்டதும் கதிகலங்கிப்போன ஒரு ஆத்மா,—உமர்-பின்-ஆஸ்—"இவ்வாறு ஒரு உயர் பதவி வகிக்கும் உத்தியோகஸ்தர் இத்துணை கேவலத்திற் குள்ளாக்கப் படுவதால் அவர் வகிக்கும் பதவியின் அந்தஸ்திற்குப் பெரும் பங்கமேற்படக் கூடுமல்லவா?" என்று பரிவுடன் கேட்கிறார்.

"சத்தியத்திற்கும், சட்டத்திற்கும் முன்னே அந்தஸ்தும், பதவியும், ஆண்டியும், அரசனும் அடிபணிவதைவிட வேறு மார்க்க

மில்லை. குற்றம் நிரூபணமான பின்பு, தவறிழைத்தவன் எவனாயிருந்தாலும் அதற்குரிய தண்டனையை அனுபவித்தே தீர வேண்டுமென்பது இஸ்லாமியக் கட்டளை.”

கலீபா உமரின் வாயிலிருந்து சுடச்சுடக் கிளம்பிய பதிலுரையிது. இறுதியாக, தீர்ப்பின்படி தண்டனை நிறைவேற்றப் படுகிறது என்பதோடு இதனை நிறுத்திக் கொள்வோம்.

இன்னும் இதுபோன்ற உமரின் உதாரணங்கள் அநேகமுள. அந்த உதாரணங்களை, அந்தக்கால உமரின் நீதி நழுவா நல்லாட்சி வரலாற்றைத் துருவித் துருவிப் படித்துணர்ந்த மகான் காந்தியவர்கள் கூற நேர்ந்தது, ‘நீங்கள் ஆட்சியில் சத்தியவந்தர்களாக நடக்க வேண்டுமானால் கலீபா உமரைப் போல மக்களின் தொண்டர்களாகப் பணியாற்றுங்கள்’ என்று.

அந்தக் காந்தியை முற்றமுற்றப் பேணிப் பின்பற்றித் திரிவதாகக் கூறுகின்ற மேதைகளுக்கும், அந்த அவதாரத் தந்தையின் அருள் வாக்குப்படி நடந்தே தீருவோம் என்று கச்சைகட்டி புறப்படும் காந்திய சீடகோடிகள் யாவர்க்கும், இந்த 1949 ஆகஸ்ட் சுதந்திர நினைவு விழாவில், அந்த 1937-ல் அருளிய அண்ணல் அஹிம்சா மூர்த்தியின் வாக்கை நினைவுறுத்தவே கட்டுரையின் தலைப்பிலே காந்திஜியின் ஒரே வாக்கியத்தைத் தீட்ட முற்பட்டேன்.



**கா. மு. முஹம்மது எஹ்யா**
**121, அரப் ஸ்ட்ரீட்,**
**சிங்கப்பூர்.**

அன்புள்ள ஆசிரியர்
அவர்களுக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும் தங்கள் முரசைத் தொடர்ந்து படிக்கின்ற பல்லாயிரம் வாசகர்களுள் நானும் ஒருவன். முஸ்லிம் முரசில் அரசியல் சமூக விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி அறிவுடன் எழுதப் பெறும் அருமையான கட்டுரைகளையும் தலையங்கங்களையும், குறிப்பாகத் தமிழ் நடையின் இனிமையையும் எவரும் போற்றாமலிருக்க முடியாது.

என்போன்ற முஸ்லிம் இளைஞர்கள் ஏராளமாக உங்கள் பத்திரிகையை விரும்பிப் படிக்கின்றனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்வது என் கடமை என உணருகிறேன்.

வஸ்ஸலாம்.

இங்ஙனம்,
கா. மு. முஹம்மது எஹ்யா.



# எழுச்சிக்குரல்

[மதிப்புரைக்குப் புத்தகம் அனுப்புவோர் இரண்டு பிரதிகள் அனுப்பவேண்டும்]

“எழுச்சிக்குரல் அல்லது அன்பழைப்பு” என்னும் இச்சிறிய நூல், “இளம்பிறை” என்னும் புனைபெயர் பூண்ட K. H. ஷேக் அப்துல்காதிர் அவர்களால் எழுதப் பெற்றிருக்கிறது.

‘எழுச்சிக் குரல்’ என்னும் இச்சிறு நூலுக்கு ‘இளைஞர் விருந்து’ எனக்கூறுவது பொருந்தும். இக்கால இளைஞர் விரும்பிப் படிக்கத்தகுந்த இனிய தமிழில் அலங்கார நடையில் அழகாக அமைந்திருக்கிறது. இதில் இருக்கின்ற விஷயங்களெல்லாம் இளைஞர்களுக்கும் இளநங்கைகளுக்குமே மிகப் பயன்படுமாறு ‘இளம்பிறை’ இதனை எழுதியிருக்கின்றார். இளம்பிறை தமது சிந்தனையில் எழுந்த சிறந்த விஷயங்களை அருமையான மேற்கோள்களுடன் அழகாக எடுத்துக் கூறுகின்றார்.

கவி இக்பாலின் ‘புகழ்வாழ்ந்த முறையீடு’ (ஷிக்வா) போல் இது இருக்கிறதென்றால், இதன் கற்பனைத் திறத்தையும் கருத்தின் சிறப்பையும் சொல்லவும் வேண்டுமா?

இதன் தமிழ் இனிமையைப் பற்றி என்ன எழுதுவதென்று தெரியவில்லை. “செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே” என்று பாரதியார் பாடியது, ‘எழுச்சிக் குரல்’ போன்ற இனிய தமிழ் நூல்களைப் பற்றித்தான் என்று கூறவேண்டும்.

“எழுச்சிக் குரல்” என்னும் இந்நூலுக்குச் “சிந்தனைச் செல்வம்” என்று இன்னொரு பெயரும் கூறலாம். புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் எண்ண அலைகள் படிப்படியாக எழுகின்றன.

இந்நாட்டு முஸ்லிம்களின் இன்றைய இழி நிலையைக் கண்டு இதயங் குமுறுகின்றார் “இளம்பிறை”. அதனைப் போக்கும் வழி வகைகளையும் வரிசையாக எடுத்துக் கூறுகின்றார்.

முஸ்லிம் இளைஞர்களையும் யுவதிகளையும், பணக்காரர்களையும் நோக்கி அவர் கூறுகின்ற புத்திமதிகளும், பொன்மொழிகளும் எத்தனை ஆயிரம் பொன் பெறுமென்று மதிப்பிட முடியவில்லை!

இஸ்லாமிய இளைஞர்களைப் பார்த்து அவர் கூறுகின்றார்:

'ஏ இஸ்லாமிய இளங்காளாய்!

அந்தோ, தூயமனத்தைத் தீய தாக்கும் துர்ச்சகவாசத்தின் அழைப்பு! மதியைக் கெடுத்து மதிப்பைக் குறைக்கும் மதுக்கிண்ணங்களின் ஜொலிப்பு! பொல்லாத துயருக்கு உள்ளாக்கி வைக்கும் பொதுமகளிர் ஏவும் புன்சிரிப்புப் போன்ற பல புதிய காட்சிகள் உன் கண்ணைக் கவர்ந்து கருத்தை இழுக்கும் காந்த சக்திபோல் தாக்க முனைகின்றன. வானத்திலே வகை வகையான வர்ண ஜாலங்கள் தோன்றி மறைவதுபோல உன் இதயத்திலே எண்ணற்ற சிந்தனை அலைகள் எழுந்து மறைந்து களியாட்டஞ் செய்கின்றன அன்பா, அதிஜாக்கிரதை! அந்தச் சோதனைச் சுழலிலே நீ மாட்டிக் கொண்டாயானால் உன்னை மீட்ட முடியாது. கொலைக்களம் புகுந்த குரும்பாட்டின் கதிதான் உனக்கு நேரும். ஐயோ, அந்த துர்ப்பாக்கியமான நிலை ஏற்பட்டால, உன் அழகு சிதைந்து, அங்கம் தளர்ந்து, ஆண்மை குறைந்து, இருண்ட வாழ்விலே யுழன்று உபயோகமற்ற சருகாயுலர்ந்து, உன்னால் பயன்பெற்றுப் புகழ் காணவேண்டிய சமுதாயத்தைச் சித்திரவதை செய்யும் சத்துருவாய் உருமாறிப் போவாய். சபலபுத்திக்கும் அவலவாழ்வுக்கும் சரண்புகுந்த ஒரு கோழை உலகில் எதைச் சாதிக்க முடியும்? "இன்றைய இளைஞரின் உளப்பண்பு எதுவென்பதை நீ எனக்குக் கூறினால், வருங்கால மக்களின் ஒழுக்க முறை எத்தகையதாயிருக்கு மென்பதை நான் உனக்குக் கூறுகிறேன்" என ஆங்கில அறிஞன் பர்க் (Burke) அறைகிறான். இதிலடங்கியுள்ள மகத்தான பொருளைப் பார்த்தாயா! வருங்கால மக்களின் வாழ்வு தாழ்வுகளை நிர்ணயிக்கும் சக்தி நின் கையில்தானிருக்கிறது. சிந்தித்துப் பார்! அந்த சீரிய சக்தியோடு உன் செவ்வையான செயலும் சேர்ந்தால் அதன் விளைவு அஞ்ஞானத்தைத் தகர்க்காதா? அறிவை வளர்க்காதா? அறத்தைப் பெருக்காதா? அண்டத்தை ஆட்டாதா? அன்றி எதைத்தான் செய்யாது? அடேயப்பா, அந்த அளப்பருஞ் சக்திப் பெருக்கைச் சொல்லக் கேட்டு ஆனந்திக்கிறாய், ஆமோதிக்கிறாய்—ஆனால், அந்தச் சக்தியைச் செம்மையான முறையிலே செலவிடாது வீணாக்கிக் காலங்கடத்துகிறாய்!

"அரணுள் அடைபட்டிருந்த அறிவை வெளியேற்ற, சிறையில் தடைப்பட்டிருந்த கலையை வெளிக்காட்ட, அகிலத்தில் யாரேனும் போர் தொடுத்ததாக சான்றுண்டாவென சரித்திரத்தைப் புரட்டிப்பார்! கேவலம், ஜாதிப் போர், சமயப்போர், இனப்போர், தனப்போர், வர்த்தகப் போர், வதுவைப் போர், எல்லைப்போர் என்ற பல தொல்லைப் போர்களால் சிந்தப்பட்ட இரத்தக் கரைகளின் துர்நாற்றமெடுக்கின்ற சரித்திர ஏடுகளுக்கு மத்தியிலே, புத்தகங்களையும் புத்திமான்களையும் பொதுவுடைமை யாக்குதற்குப் போர் தொடுத்த சமுதாயம் இஸ்லாமிய சமுதாயம்" என்ற ஒரு புகழ்மணக்கும் பொன்னேட்டை மலரவைத்தவர் உன் இஸ்லாமிய இனத்தவர் என்ற உண்மையை விளங்கிக் கொள். இத்தகைய புத்தகப் பித்தர்களின் சந்ததியைச் சேர்ந்த நீ, எத்தனைப் புத்தகங்களைப் படித்து, எத்தகைய விஷய ஞானம் பெற்ற விவேகியாய் விளக்கவேண்டும்? நீயோ, இன்று கல்விச் சாலையில் கழித்த நேரம்போக மீந்த உன் ஓய்ந்த நேரங்களிலே, ஏதோ படிக்கிறாய், ஆராய்ச்சியுங்கூட செய்கிறாய். எதை? கண்ணன்பாலா என்ற நடிகைக்குக் கண்கள் பெருத்திருப்பதற்குக் காரணம், காப்பிக் கடையில் கரிச்சட்டி கழுவிக் கொண்டிருந்த கருப்பாயி, காமிக் நடிகையாக முன்னேறி கமலா பாய் எனப் பெயர் மாற்றிக் கொண்டாளென்பதற்கு ஆதாரம், கிரேட்டா கார்போ, கிரேஸீ பீல்ட்ஸ் என்ற இரண்டு நடிகையருள் கிழண்டவள் யார் என்ற கேள்விக்கு பதில், ஜம்போ என்ற படத்தில் நடிக்கும் குரங்கும், ஜய்பாரத் என்ற படத்தில் நடிக்கும் குதிரையும் யாருக்குச் சொந்தமானவை என்ற விபரம்! அது மட்டுமா? கோகிலகான பாடகி தேய்த்துக் கொள்ளும் கூந்தல் தைலத்தின் பெயர், சைகால் உபயோகித்துவந்த சவரக்கத்தியின் ட்ரேட் மார்க்-போன்ற பல விஷயங்களைத் தேடித்தேடி மூளைக் கொதிக்கும் வரை ஆராய்கிறாய். இதுபோன்ற அற்ப விஷயங்களை ஆராய்ந்து உன் மூளையைக் குழப்பிக் கொள்வதைவிட இஸ்லாமிய வரலாற்று நூல்களை நீ படிக்கலாகாதா? அவற்றை ஆராய்ந்து அறியலாகாதா?" என்று கேட்கின்றார்!

"ஏ இஸ்லாமியப் பெண்ணினமே!
எமதின்னுயிரின் பெட்டகமே!"

என்று கூவியழைத்து ஏதேதோ கூறுகின்றார்!

ஏனைய நாட்டுப் பெண்கள் இன்று அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பற்றிப் பேசிவிட்டு,

"ஆ! என் சோதரி!

சர்வ சுதந்திரம் படைத்த நீயோ, சரித்திரப் புகழ் படைத்த நீயோ, குழைத்த சந்தனம் பூசப்பட்ட கொம்பு முளைத்த தேங்காயைக் கண்டவுடன் குனிந்து சாஷ்டாங்கஞ் செய்து, கொள்ளை போகிறாயே!" என்று கூறிவிட்டு அருமையான புத்திமதிகளை அருமைச் சோதரிகளுக்கு அள்ளி அள்ளி வீசுகிறார் அழகான தமிழ் நடையில்!

தமிழறிவுள்ள ஒவ்வொரு ஆடவரும் பெண்டிரும், சிறப்பாக முஸ்லிம் இளைஞர்களும், யுவதிகளும் பலமுறை படித்துப் படித்து இன்புறத் தகுந்த இனிய புத்தகம். இதன் விலை 12 அணா தான்!

கிடைக்குமிடம்:

K. H. ஷேக் அப்துல் காதர்,
கோரிப்பாளையம்,
தல்லாகுளம் P. O (மதுரை)

# பாக்கிஸ்தான் போர் தொடுக்குமா ?

லாகூர் "லீட்" தலையங்கம்

ஆப்கானிஸ்தானத்தைப் பற்றியும், விரல்விட்டு எண்ணக் கூடிய அதன் சைன்ய பலத்தைப் பற்றியும் உருக்குலைந்து நிற்கும் அதன் பொக்கிஷத்தைப் பற்றியும் அதன் ஓய்வு ஒழிவில்லாத உள்நாட்டுப் பூசல்களைப் பற்றியும் ஓரளவேனும் தெரிந்தவர்களுக்கு இவ்வநாகரிகக் காட்டுமிராண்டிப் பிற்போக்கு எதேச்சாதிகார மலைப் பிரதேச நாடானது, பாக்கிஸ்தானை நோக்கிப் பூப்பிரதேசக் கோரிக்கைகளை விடுப்பதும் அக்கோரிக்கைகள் உடனடியாக நிறைவேற்றிவைக்கப் பெருவிடின் பண்டைச் சரித்திரத்தில் நிகழ்ந்தவாறு கத்தி முனையில் பிரச்னை தீர்க்கப்படுமென்று கொக்கரிப்பதும் விடாநகைப்பையே உண்டு பண்ணும்.

முற்காலத்தில் இந்தியாவின் மீது பாய்ந்து போர் புரிந்தவர்கள் இந்த சோதாக் காபூலிகள் அல்லவென்பதையும் அவர்களெல்லாம் டூராண்டு எல்லைக்கோட்டின் இரு பக்கங்களிலுமுள்ள புஜபல பராக்கிரமம் நிறைந்த போர் மரபினர் என்பதையும் இக் காபூலிகள் தங்கள் கருத்திலிறுத்திக் கொள்ளுவார்களாக ! ஆப்கானிஸ்தானிற்கும் பாக்கிஸ்தானுக்கும் போர் மூளுமாயின் இவ்வீர மரபினரின் அனுதாபம் இத் தான் தோன்றித் தர்பாரின்பா லிரா தென்பதையும் ஜனநாயக சுயேச்சை சுதந்திர இஸ்லாமியக் குடியரசின் பக்கமே இருக்குமென்பதையும் முன்னொரு சமயம் அமானுல்லாகான் கண்டு கொண்டதே போன்று இன்றைய ஆப்கன் மன்னரும் கண்டு கொள்ளுவாரென்பது திண்ணம்.

ஏதோ பெயரளவில் மரியாதைக்காகவே ஆப்கானிஸ்தானம் ஒரு தேசம் என்றோ நாடு என்றோ அழைக்கப்படுகிறது. இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் உள்ள பல நூற்றுக்கணக்கான சின்னஞ்சிறு சமஸ்தானங்களிலொன்றைப் போன்றதே இதுவும். மாதம் ஒன்றுக்குத் தன் சோல்ஜர்களுக்குப் பதினாறு ரூபாய் விகிதமே சம்பளம் கொடுக்கும் ஒரு நாடு தனது பிரஜைகளில் சரிபாத்தி தொகையினரை அவர்களின்வயிற்றுப் பாட்டிற்காகச் சுற்றுப்புறச் செழிப்பான நாட்டு மக்களை அடித்துப் பிடுங்குவதற்காக அவர்கள் தத்தம் வீடு வாயில்களை விட்டு வெளியேறச் செய்யும் ஒரு நாடு தன்னை ஒரு நாடு என்று சொல்லிக் கொள்ளுவதற்குச் சிறிதும் அருகதையற்றது.

எதிரும் புதிருமான தேசங்களின் அரசியல் சூத்திரக் கயிறுகளின் பலத்தைக் கொண்டே உலகப் படத்தில் ஆப்கானிஸ்தானம் ஒரு நாடாகக் காட்சி யளித்துக் கொண்டிருக்கிறது. இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினிடம் சமீப காலம் வரை ஆப்கானிஸ்தானம் உதவிப் பணம் பெற்று உயிர் பிழைத்து வந்ததென்பது உலகறிந்த உண்மை.

இவ்வளவு கேவலமான ஒரு நாடு உலகத்திலேயே மிகப்பெரிய இஸ்லாமிய நாடான பாக்கிஸ்தானை நோக்கி அதன் தலைநகரான கராச்சி யுட்பட சிந்துநதி வரை பிரதேசக் கோரிக்கை விடுப்பதென்றால் அதற்கு எத்துணை ஆணவமும் துடுக்குத்தனமும் இருக்கவேண்டும் ! இஸ்லாத்தின் சிறந்த பண்பாட்டிற்கேற்ப ஆப்கானிஸ்தானின் இத்தகைய விஷமத் தனத்தை பாக்கிஸ்தான் சிறிதும் பொருட்படுத்திக் கொள்ளவில்லை. ஒரு இஸ்லாமிய நாட்டின் மீது மற்றொரு இஸ்லாமிய நாடு மோதிக் கொள்ளுவதென்பது இஸ்லாமிய சகோதரத்துவத்திற்கே இழுக்கை உண்டுபண்ணத் தக்கதென இதுகாறும் பாகிஸ்தான் கருதி வந்துள்ளது.

மிருகபலம் ஒன்றையே குறிக்கோளாய்க் கொண்டு இஸ்லாமிய சகோதரத்துவ இலட்சியங்களையெல்லாம் உதறித் தள்ளும் ஆப்கானிஸ்தானம் இன்னமும் தனது விஷமத்தனங்களை விடாவிடின், பாகிஸ்தானும் இஸ்லாமிய நாடுகளெல்லாம் ஏக சகோதரத்துவமுள்ளவை என்ற தனது கொள்கையைப் புனராலோசனை செய்து தக்க பதில் அடிகொடுக்க நேரிடலாம் என்று எச்சரிக்கிறோம்.

—"லீட்"

---

# ஆழியே! வாழி!

(இளம்பரிதி)

கடலே வாழி ! வாழி நீ கடலே !
பத்தினிப் பெண்ணின் பல்லினை நிகர்த்த
முத்தினை அளிக்கும் முரசலைக்கடலே !
இத்தரைமீது என்றும் நீ வாழி !
வாழி நீகடலே ! கடலே வாழி நீ !

* * * * *

பாரில் விளையும் பல பொருள் தனக்கு
பஞ்சம் உண்டதைப் பார்த்ததுமுண்டு
உன்னில் விளையும் உப்புக் கென்றும்
பஞ்சம் என்றுநீ பகர்ந்தது உண்டா ?
ஆகவே ஆழியே ! வாழிநீ வாழி !

* * * * *

உன்னில்வளரும் ஊனுடைப் பொருளினை
உணவாயளித்து உதவிடும் உன்னை இம்

மண்ணிடையுள்ளோர் மறந்தனர்; நீ அதை
எண்ணிதான் போலும் இதயம் குமுறுகிறாய்!
ஆயினும் கடலே! ஆறுதல் கொள்வாய்!
மனிதன் மடமையை மன்னிப்பாய் கடலே!

*    *    *    *    *

மனிதர் யாரும் ஓர்நிறை; எனினும்
மனிதனை மனிதன் மதிக்கின்றானில்லை!
தாழ்ந்தவனென்று தள்ளியே வைத்து
இகழ்ந்திடுகின்றான் இன்னொருதோழனை!
உன்னில் உண்டுமா உயர்வும் தாழ்வும்?
ஆற்றில் தெளியும் அழகிய புனலும்
நாற்றமே மிகுந்த சாக்கடை நீரும்
ஒன்றாய்க் கலந்து உன்னுள் இணைய
ஒப்பும் உனது உள்ளம் பெரிதே!
செப்பும் எனது நன்றி நீ பெற்று
கடலே வாழி! வாழி நீ கடலே!

*    *    *    *

நாவாய் செலுத்தி நற்றொழில் புரிய
ஈவாய் உந்தன் இதயத்திடமே
ஈகையை மறப்பவன் என்னுலமடையன்
இதனைப் பொறுப்பாய்! என்றுமே தணியாய்!
நுரையை கக்குமுன் திரையை அடக்கு
கோபம் நீக்கியுன் குளிர்முகம் காட்டு
சாந்தம்! சாந்தம்!! சாந்தமே கொண்டிரு!
கடலே வாழி! வாழி நீ கடலே!

Edited & Published by M. R. M. Thahir, 132, Broadway, Madras 1 & Printed by M M. Thanigaimalai at the Sengunthа Mithran Press, 33, Armenian Street, Madras 1.

